# ஆஸ் நாட்டு

# மாயாவி




அங்கில மூலம் :

எல். பிராங்க் பாம்

தமிழாக்கம் :

ரா. அ. பத்மநாபன்

ப. மோஹன்



உமாதேவன் கம்பெனி

தேனாம்பேட்டை சென்னை 18

# பதிப்புரை

டோரதி என்ற சிறுமி மாயாஜால உலகமான ஆஸ் நாட்டுக்குப் போய் வந்த கதையை இதன் ஆசிரியர் (எல். பிராங்க் பாம்) தம் குழந்தைகளுக்காகப் பழைய காகித உறைகளின்மேல் எழுதினராம்; பிறகு தம் சொந்தச் செலவில் நூலாக வெளியிட்டார். அதிலிருந்துதொலேந்தது அவரது வறுமை! மேலும் மேலும் பெருகி வளர்ந்த வாசக அன்பர்களைத் திருப்திபடுத்த அவர் ஏராளமான 'ஆஸ்' கதைகளை எழுத வேண்டியதாயிற்று. அப்படி எழுதின பெரிய 'ஆஸ்' கதைகள் பதினன்கு; சிறிய கதைகள் எத்தனேயோ!

இந்த முதல் 'ஆஸ்' கதையை ஹாலிவுட் மெட்ரோ-கோல்டுவின்-மேயர் கம்பெனியார் பல ஆண்டுகளுக்குமுன் சினிமாப் படமாக எடுத்தார்கள். சென்னையில்கூட அப்படம் வெற்றிகரமாக ஓடியது, பல பெரியவர்களுக்கு ஞாபகம் இருக்கலாம்.

இதுவரை எத்தனேயோ மொழி பேசும் குழந்தைகளோடு உறவாடின

டோரதி இப்போது ரா. அ. பத்மநாபன், ப. மோஹன் ஆகிய இருவரின் அழைப்பிற்கும் உழைப்பிற்கும் இணங்கித் தமிழ்நாட்டுக் குழந்தைகளோடு உறவாட வந்திருக்கிருள். அவள் மட்டுமா? அவளோடு இணைபிரியாத செல்ல நாய்க்குட்டி 'தோத்தோ' வும், மற்றும் ஆஸ் நாட்டில் அவள் சந்தித்த நண்பர்களுங்கூடத்தான். ஆஸ் மாயாவி இருக்கவே இருக்கிருர். மாயாவிகளுக்கெல்லாம் மாயாவியாயிற்றே அவர்!

நம்மோடு டோரதி உறவாடப் போகிருள் என்ருல் இந்தக் கல்லும் மண்ணும் நிறைந்த உலகத்திலல்ல. அற்புதமான மாயாஜால ஆஸ் நாட்டுக்கு நம்மை அழைத்துக்கொண்டு போகப் போகிருள். மகா மாயாவிகள் இருக்கும் நாட்டிற்குள் நுழைய ஏதாவது மந்திரம் - மாயம் கற்றுக்கொள்ளவேண்டியிருக்குமோ என்று தயங்க வேண்டாம். முதல் பக்கத்தைத் திருப்பிப் படிக்க ஆரம்பித்தால் போதும்!

# 1

அமெரிக்காவிலே கான்ஸாஸ் ராஜ்யத்தில் கண்ணுக் கெட்டும் தூரம் வரை கோதுமை வயல்கள் நிறைந்த ஒரு கிராமத்தில் டோரதி வசித்து வந்தாள். டோரதிக்கு அப்பா அம்மா கிடையாது. அவளுடைய பெரியப்பாவும் பெரியம்மாவுந்தான் இருந்தார்கள். அவர்கள் வசித்து வந்த வீடு சிறிய வீடு. அதில் மாடியும் கிடையாது; பூமிக்கடியில் அறைகளும் கிடையாது. ஆனால் பூமிக் கடியில் ஒரே ஒரு சிறிய அறை போன்ற குழி இருந்தது. கான்ஸாஸில் திடீரென்று பேய்க்காற்று அடிக்கும். அப் போது எல்லாரும் இந்தக் குழிக்குள்ளேதான் போய்ப் பதுங்குவார்கள்.

டோரதியின் பெரியம்மா எம், ஒல்லியாக வெடவெட வென்று இருப்பாள். அவள் முகத்தில் சிரிப்பே தோன் றினதில்லை. பெரியப்பாவோ எப்போதும் வேலை செய்து கொண்டேயிருப்பார்; சிரிக்க அவகாசம் இராது. காலை முதல் இரவு வரை உழைப்பது ஒன்றே அவருக்குத் தெரியும்.

டோரதிக்கு விளையாட்டுத் துணை தோத்தோதான். தோத்தோ ஒரு சின்ன நாய்; கறுப்பாக இருக்கும்; நீண்ட

பட்டுப்போன்ற மயிர் அடர்ந்தது. குறும்பு நிறைந்த கண்கள். வேடிக்கையான மூக்கு. டோரதி தோத்தோவுடன் விளையாடும்போது தோத்தோவின் கண்கள் குறும்புச் சிரிப்பு சிரிப்பது போலத் தோன்றும். டோரதிக்கு அதன்மேல் கொள்ளை ஆசை.

அன்று அவர்கள் விளையாடவில்லை. வடக்கே வெகு தொலைவில் காற்று ஊளையிடும் சத்தம் கேட்டது. உயர்ந்து வளர்ந்திருந்த பயிர்களெல்லாம் தலை சாய்ந்து அலையாடின. பெரிய சுழல் காற்று வருவதற்குரிய சின்னங்கள் அவை.

"எம், சூறாவளி அடிக்கப் போகிறது! நான் போய் மாடு கன்றுகளைப் பத்திரப்படுத்துகிறேன்," என்றார் பெரியப்பா ஹென்றி.

பெரியம்மா எம் கைவேலையை அப்படியே போட்டு விட்டு வாசலுக்கு வந்து ஆகாயத்தைப் பார்த்தாள்; சூறாவளிக்காற்று மிக நெருக்கத்திலேயே வந்து விட்டதை உணர்ந்தாள்.

"டோரதி, ஓடு, ஓடு! சீக்கிரம் அந்தச் சூறாவளிக் குழிக்கு ஓடு!" என்று கத்தினாள் அவள்.

குழி அறையின்மேலே இருந்த மூடி போன்ற கதவைத் திறந்து, படி வழியே உள்ளே இறங்கினாள் பெரியம்மா. டோரதி தோத்தோவைத் தூக்கிக்கொண்டு பெரியம்மாவின் பின்னால் ஓடினாள். ஆனால் படியில் காலை வைத்து இறங்குவதற்குள் காற்று திடீரென்று பேரிரைச்சலுடன் வீட்டின்மேல் மோதிற்று. டோரதி கால் தவறி அப்படியே தரையில் உட்கார்ந்தாள்.

அப்போது ஓர் அதிசயம் நிகழ்ந்தது:

வீடு இரண்டு மூன்று தடவை சுழன்றது; பிறகு மெதுவாக மேலே எழும்பிற்று. சுற்றிலும் ஒரே இருட்டு; காற்றின் இரைச்சல் ஒரே பயங்கரமாக இருந்தது. ஆனால், டோரதியின் வீடோ சுகமாக மிதந்து செல்வது போல் தோன்றிற்று.

முதலில் அவளுக்கு ஒரு பயம்: இப்படியே போய்க் கொண்டிருக்கும் வீடு திடீரென்று கீழே விழுந்துவிட்

டால்—? ஆனால் வெகுநேரம் ஆகியும் அப்படி ஏதும் நிகழவில்லை. அவள் கவலை குறைந்தது. அவளுக்கு அலுப்பாக இருக்கவே, மெதுவாக நகர்ந்து சென்று, தன் படுக்கையில் ஏறிப் படுத்தாள்; சற்று நேரத்தில் கண்ணயர்ந்து தூங்கலானாள்.

* * *

திடீரென்று ஏற்பட்ட ஓர் அதிர்ச்சியினால் டோரதி கண்விழித்துக்கொண்டாள். மிருதுவான மெத்தையில் படுத்திருந்திராவிட்டால் அவளுக்குப் பலத்த காயம் பட்டிருக்கும். டோரதி படுக்கையிலிருந்து குதித்தெழுந்து ஓடி, வீட்டின் கதவைத் திறந்தாள். தோத்தோ அவளைப் பின் தொடர்ந்தது. சுழல்காற்று அந்த வீட்டை ஓர் அழகான புது இடத்தில் கொண்டு சேர்த்திருந்தது. எங்குப் பார்த்தாலும் விவரிக்க முடியாத அளவு அழகாயிருந்தது அந்த இடம்.

அந்த இடத்தின் அழகை ரசித்துக்கொண்டிருந்த டோரதி, தன்னை நோக்கிச் சில விசித்திர மனிதர்கள் வருவதைக் கவனித்தாள். அந்த மனிதர்கள் டோரதியின் உயரமே இருந்தார்கள்; ஆனால், வயதிலோ பெரியவர்களாகத் தோன்றினார்கள். அவர்கள் அணிந்திருந்த ஆடைகளோ இன்னும் விசித்திரமாக இருந்தன. அவர்களில் மூன்று ஆண்களும், ஒரு பெண்ணும் இருந்தனர்.

அந்தப் பெண் டோரதியிடம் வந்து, "மாயா ஜால தேவதையே, மஞ்சுகின் நாட்டிற்கு வந்த உனக்கு நல்வரவு கூறுகிறோம். மிகப் பொல்லாதவளான கீழ்த் திசைத் தேவதையைக் கொன்று மஞ்சுகின் நாட்டிற்கு விடுதலை தந்ததற்காக உனக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்!" என்று சொல்லி வணங்கினாள்.

டோரதிக்கு ஒன்றுமே புரியவில்லை. "எனக்கா இந்த வரவேற்பு? இதில் ஏதோ தவறு இருக்கிறது! நான் யாரையும் கொல்லவில்லையே!" என்றாள்.

"நீ கொலலாவிட்டாலென்ன ? உன் வீடு அவளைக் கொன்றிருக்கிறது. அதோ வீட்டுக்கு அடியில் அந்தப் பொல்லாத தேவதையின் கால்கள் இன்னும் நீட்டிக்கொண்டிருக்கின்றன, பார்!" என்றாள் அந்தப் பெண்.

டோரதி பார்த்தாள். வீட்டுக்கு அடியிலிருந்து இரண்டு கால்கள் நீட்டிக்கொண்டிருந்தன. அக்கால்களில் இரண்டு வெள்ளிப் பாதரட்சைகள் இருந்தன.

"கீழ்த்திசைத் தேவதையின் கால்களா இவை?" என்றாள் டோரதி.

"ஆமாம். அவள் மிகவும் பொல்லாதவள். பல ஆண்டுகள் மஞ்சுகின் நாட்டு மக்களை அடிமைப்படுத்திக் கொடுமையாய் நடத்தி வந்தாள். நீ வந்து அவர்களை விடுவித்து விட்டாய். இந்த உதவிக்கு அவர்கள் நன்றி செலுத்துகிறார்கள்!"

"அது சரி. மஞ்சுகின் மக்கள் யார்?"

"கீழ்த்திசை நாட்டில் வாழ்பவர்கள். அவர்களை இந்தப் பொல்லாத தேவதை ஆண்டு வந்தாள்."

"நீயும் ஒரு மஞ்சுகினா?"

"இல்லை, இல்லை. நான் அவர்களுடைய சிநேகிதி; வடதிசைத் தேவதை. கீழ்த்திசைப் பொல்லாத தேவதை இறந்ததும் எனக்குச் சடுதியில் செய்தி அனுப்பினர். நான் இங்கு வந்து சேர்ந்தேன்," என்றாள் அந்தப் பெண்.

"அட கடவுளே! நீயும் ஒரு தேவதையா! உண்மையிலேயே நீ தேவதையா?" என்றாள் டோரதி.

"ஆமாம்! ஆனால், நான் ஒரு நல்ல தேவதை; என்னை எல்லோரும் நேசிக்கிறார்கள்."

"ஆனால், எல்லாத் தேவதைகளும் கெட்டவர்கள் என்றல்லவா நான் நினைத்து வந்தேன்!"

"இல்லை. கீழ்த் திசையிலும் மேல் திசையிலும் வாழும் தேவதைகளே கெட்டவர்கள். ஆனால், இருவரில் கீழ்த் திசைத் தேவதையை நீ கொன்றுவிட்டாய். அதனால் ஆஸ் நாடு முழுவதிலும் இப்போது ஒரே ஒரு கெட்ட

தேவதைதான் இருக்கிருள். மேல் திசையில் இருக்கிருள் அந்தத் தேவதை."

"இந்த உலகத்தில் தேவதைகளே கிடையாதென் றும், அவர்கள் செத்து மறைந்து பல ஆண்டுகள் ஆகி விட்டன என்றும் என் பெரியம்மா எம் சொல்வாளே!" என்ருள் டோரதி.

"உன் பெரியம்மா எங்கே இருக்கிருள்?" என்று வடதிசைத் தேவதை கேட்டாள்.

"கான்ஸாஸில்."

"கான்ஸாஸா? அது எங்கே இருக்கிறது? நான் கேட்டதில்லையே! அது நாகரிகமான தேசமா?"

"ஆமாம்."

"அப்படியா? இப்பொழுது புரிகிறது. நாகரிகம் முற்ற முற்றத் தேவதைகளையெல்லாம் ஒழித்துவிடுவார் கள். ஆனால், இங்கே ஆஸ் நாட்டிலே அப்படியில்லை. வெளி உலகத்துக்கும் இந்த ஆஸ் நாட்டிற்கும் தொடர்பே கிடையாது. அதனுல் இங்கே நாகரிகம் வளர வழியில்லை; தேவதைகள் இருக்கிருர்கள்; மந்திர ஜால மாயாவிகள் இருக்கிருர்கள்."

டோரதி ஆச்சரியத்துடன், "மாயாவிகளா?" என்று கேட்டாள்.

"ஆமாம். எல்லா மாயாவிகளிலும் மிகவும் சாமர்த் தியம் வாய்ந்தவர் ஆஸ் நாட்டு மாயாவியே! எங்கள் எல்லாருடைய திறமையை ஒன்று சேர்த்தால்கூட அவ ருடைய திறமைக்குச் சமமாகாது."

"அவர் எங்கே இருக்கிருர்?"

"அவர் மரகத நகரத்தில் வசிக்கிருர்," என்ருள் தேவதை.

இதுவரை பேசாமல் இருந்த மஞ்சுகின் ஆண்கள் மூவரும் கீழ்த்திசைக் கெட்ட தேவதையின் கால் தொங் கிக்கொண்டிருந்த இடத்தைச் சுட்டிக்காட்டி, சந்தோஷத் துடன் ஆரவாரம் செய்தார்கள். வீட்டுக்கு அடியிலிருந்து நீட்டிக்கொண்டிருந்த கீழ்த்திசைக் கெட்ட தேவதையின்

கால்கள் காணவில்லை. வெள்ளிப் பாதரட்சைகள் மட்டுமே இருந்தன.

"அவ்வளவுதான், அவள் சமாசாரம் முடிந்தது. டோரதி, அந்த வெள்ளிப் பாதரட்சைகளை இனி நீ அணிந்துகொள்ளலாம்," என்றாள் வடதிசை நல்ல தேவதை.

"அதில் ஏதோ மந்திரசக்தி இருக்கிறதென்று கேள்விப்பட்டிருக்கிறோம்," என்று ஒரு மஞ்சுகின் மனிதன் சொன்னான்.

டோரதி அந்த வெள்ளிப் பாதரட்சைகளைப் பத்திரமாய் எடுத்து வைத்தாள். பிறகு, "அது இருக்கட்டும். நான் எங்கள் கான்ஸாஸ் கிராமத்துக்குப் போய் என் பெரியம்மா, பெரியப்பாவுடன் இருக்க விரும்புகிறேன். ஊர் திரும்ப வழி என்ன?" என்று கேட்டாள்.

ஒரு மஞ்சுகின் சொன்னான்: "இங்கிருந்து கொஞ்ச தூரம் கிழக்கே போனால் ஒரு பெரிய பாலைவனம் இருக்கிறது. அதை யாரும் கடக்க முடியாது."

"தெற்கே குவாட்லிங்குகள் நாடு இருக்கிறது. அதற்கப்பாலும் ஒரே பாலைவனம்," என்றான் மற்றொரு மஞ்சுகின்.

"மேற்கேயும் அப்படித்தான். மேற்கே விங்கீக்கள் நாடும், அதற்கப்பாலும் பாலைவனம் இருக்கிறது. மேற்கே தான் மேல்திசைக் கெட்டதேவதை இருக்கிறாள்," என்றான் மூன்றுமவன்.

"வடக்கே என்னுடைய நாடு. அதற்கப்பாலும் ஒரே பாலைவனந்தான். இந்த ஆஸ் நாட்டைச் சுற்றி நாற்புறமும் பாலைவனமே. நீ இங்கேயே எங்களுடன் தங்க வேண்டியதுதான்; வேறு வழியில்லை," என்றாள் தேவதை.

இதைக் கேட்டதும் டோரதி தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். அது கண்டு பொறுக்காத மஞ்சுகின்களும் அழுதார்கள்.

வடதிசைத் தேவதை தன் தலையிலிருந்த குல்லாவை எடுத்துத் தன் மூக்கின்மேல் வைத்துக்கொண்டு, "ஒன்று-

இரண்டு, மூன்று," என்ருள். உடனே அக்குல்லாய் ஒரு கரும்பலகையாக மாறிற்று. அதில் பெரிய எழுத்துகளில் '**டோரதி மரகத நகரத்துக்குப் போகட்டும்,**' என்று எழுதியிருந்தது.

வடதிசைத் தேவதை கரும்பலகையை எடுத்துப் படித்துப் பார்த்தாள்; "உன் பெயர் டோரதியா?" என்ருள்.

"ஆமாம்," என்ருள் டோரதி.

"அப்படியாஞல், நீ மரகத நகரத்துக்குப் போக வேண்டும். அங்கே போஞல் ஒருவேளை ஆஸ் மாயாவி உனக்கு உதவி செய்யக் கூடும்."

"மரகத நகரம் எங்கே இருக்கிறது?" என்று கேட்டாள் டோரதி.

"ஆஸ் நாட்டின் நடு மையத்தில் இருக்கிறது. எல்லாம் வல்ல ஆஸ் மாயாவி அதை ஆள்கிருர்."

"அதற்கு எப்படிப் போவது?"

"நடந்துதான் போக வேண்டும். தூரம் மிக அதிகம். வழியில் சில பகுதிகள் நன்ருயிருக்கும். சில பகுதிகள் இருண்டும், பயங்கரமாயுமிருக்கும். எனக்குத் தெரிந்த மந்திரமெல்லாம் செய்து உனக்கு ஆபத்து வராமல் காப்பாற்றுகிறேன். உன் நெற்றியில் முத்தமிடுகிறேன். என்ஞல் முத்தமிடப்பட்டவர்களை யாரும் துன்புறுத்த முடியாது!" என்று சொல்லி, வடதிசைத் தேவதை டோரதியின் நெற்றியில் முத்தமிட்டாள். அந்த இடத்தில் வட்டமான ஓர் அடையாளம் பளபளவென்று ஜொலித்தது.

"மரகத நகரத்துக்குப் போகும் பாதை நெடுக மஞ்சள் கல் பதித்திருக்கும். ஆஸ் மாயாவியைச் சந்தித்ததும் உன் கதையைச் சொல்லி உதவி கேள்," என்று கூறிவிட்டு வடதிசைத் தேவதை, "சரி, நான் வருகிறேன்." என்று தன் கால்களைச் சேர்த்து வைத்துக் கொண்டு மூன்று தடவை சுழன்ருள். அடுத்த விஞடி அவள் மறைந்து போஞள்.

# 2

எல்லோரும் போனதும் டோரதி வீட்டுக்குள்ளே போய், அலமாரியிலிருந்து ஒரு ரொட்டியை எடுத்து, சில துண்டங்கள் நறுக்கிக்கொண்டு, வெண்ணெயும் எடுத்துக்கொண்டாள். தோத்தோவுக்குக் கொஞ்சம் ரொட்டி கொடுத்து விட்டு, ஒரு பாத்திரத்தை எடுத்துக் கொண்டு போய் ஓடையிலிருந்து நீர் எடுத்து வந்தாள்.

தானும் தோத்தோவும் ரொட்டியும் நீரும் உட் கொண்டபின், மரகத நகரத்துக்குப் போவதற்கான ஏற் பாடுகளைச் செய்யலானாள்.

முதலில் அவள் நல்ல உடைகளை அணிந்துகொண் டாள் ; பிறகு ஒரு கூடையில் நிறைய ரொட்டி எடுத்து வைத்துக்கொண்டாள். தன் கால் பாதரட்சை தேய்ந்து பழையதாய் இருப்பதைப் பார்த்தபோது, மேஜையில் வைத் திருந்த வெள்ளிப் பாதரட்சைகள் நினைவுக்கு வந்தன. மேல்திசைக் கெட்ட தேவதையின் மந்திரப் பாதரட்சைகள் அவை. தன் பழைய பாதரட்சைகளைக் கழட்டி விட்டு, வெள்ளிப் பாதரட்சைகளைப் போட்டுப் பார்த்தாள். அவ ளுக்கென்றே செய்யப்பட்டவை போல் சரியாக இருந்தன.

''தோத்தோ, வா, நாம் மரகத நகரத்துக்குப் போய், ஆஸ் மாயாவியைக் கண்டு கான்ஸாஸுக்குப் போக வழி கேட்போம்,'' என்று தன் நாய்க்குட்டியை அழைத்துக் கொண்டு டோரதி கிளம்பினாள்.

வீட்டுக்கு வெளியே பல ரஸ்தாக்கள் இருந்தன. ஆனால் மஞ்சள் கல் பாவிய ரஸ்தா சுலபமாய்த் தெரிந் தது. கொஞ்சநேரத்தில் அந்தத் தங்கமயமான ரஸ்தா வில் அவர்கள் மரகத நகரத்தை நோக்கி நடந்துகொண் டிருந்தார்கள்.

நாள் முழுவதும் நடந்த அலுப்பினால், அன்று மாலை டோரதிக்குக் களைப்பாயிருந்தது. இரவை எங்கே கழிப்பது என்று நினைத்துக்கொண்டிருக்கையில் அங்கே ஒரு வீடு தென்பட்டது. சுற்றிலும் இருந்த மற்ற வீடுகளை விடப் பெரியதான அந்த வீட்டுத் தோட்டத்தில் பல மஞ்சுகின் ஆண்களும் பெண்களும் சந்தோஷமாய் நடனமாடிக்கொண்டிருந்தார்கள்.

டோரதியைக் கண்ட அவர்கள், அவளை வரவேற்று, இரவைத் தங்களுடன் கழிக்கும்படி சொன்னார்கள்; அவளுக்கு இரவு உணவும் தந்தார்கள். அந்த வீடு மஞ்சுகின் நாட்டில் மிகப் பணக்காரரான ஒருவருடையது. இதுவரை அவர்களைத் துன்புறுத்தி வந்த மேல்திசைக் கொடிய தேவதை ஒழிந்ததைக் கொண்டாட அவர்கள் அங்கே கூடியிருந்தார்கள். அந்தப் பணக்கார மஞ்சுகினின் பெயர் பாக்.

டோரதிக்கு மிகுந்த உபசாரத்துடன் விருந்து நடந்தது. பாக் தாமே டோரதியை உபசரித்தார். அவள் காலில் வெள்ளிப் பாதரட்சைகளைப் பார்த்த அவர், "நீயும் ஒரு கைதேர்ந்த தேவதை போலிருக்கிறதே!" என்றார்.

"ஏன்?" என்றாள் டோரதி.

"ஏனா? உன் காலில் வெள்ளிப் பாதரட்சை அணிந்திருக்கிறாய். மேல்திசைக் கெட்ட தேவதையை நீ கொன்றிருக்கிறாய். மேலும், நீ வெள்ளை உடை வேறு அணிந்திருக்கிறாய். தேவதைகளும் மாயாவிகளுந்தான் வெள்ளை உடை அணிவார்கள்."

டோரதிக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. எல்லாருமே அவள் ஒரு பெரிய மாயாஜால வித்தைக்காரி, தேவதை என்று நினைக்கிறார்கள்! அவளோ, ஓர் அப்பாவிச் சிறுமி! எதிர் பாராமல் ஒரு சுழல் காற்றில் சிக்கி, வீட்டோடு ஓர் அதிசயமான புதிய நாட்டில் வந்திருக்கிறாள். இது அவளுக்குத் தெரியும்.

பாக் அவளைத் தம் வீட்டுக்குள் அழைத்துச் சென்

ருர். அன்றிரவு அங்கு ஒரு தனியறையில் சுகமான மஞ்சத்தில் டோரதி தூங்கினுள்.

மறுநாள் காலை போஜனம் முடிந்ததும் டோரதி, "மரகத நகரம் இன்னும் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?" என்று கேட்டாள்.

"எவ்வளவு தூரம் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அந்நகரம் தொலைதூரத்தில் இருக்கிறதென்று மட்டும் தெரியும். பல நாட்கள் நடந்து செல்ல வேண்டும். வழியில் அங்கங்கே பயங்கர இடங்களையும், பற்பல ஆபத்துகளையும் கடந்து செல்ல வேண்டி வரும்," என்றுர் பாக்.

தான் கான்ஸாஸுக்குத் திரும்ப உதவி புரிய ஆஸ் மாயாவி ஒருவரால்தான் முடியுமென்று டோரதிக்குத் தெரியும். ஆகையால், துணிவுடன் மேலே நடந்து செல்ல ஆரம்பித்தாள் ; தன் நண்பர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, மஞ்சள் கல் பதித்த பாதையில் நடந்து போனுள். பல மைல்கள் நடந்த பிறகு டோரதிக்கு அலுப்பாயிருந்ததால், அவள் பாதையின் ஓரத்திலிருந்த ஒரு மர வேலியில் ஏறி உட்கார்ந்தாள். வேலிக்கப்பால் ஒரு தானிய வயல் இருந்தது. முற்றியிருந்த தானிய மணிகளைக் காக்கைகள் கொத்தாமலிருப்பதற்காக வயலில் மூங்கில் கம்பமொன்றில் ஒரு சோளக்கொல்லை பொம்மை நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது.

டோரதி அந்த வைக்கோல் பொம்மையின் முகத்தை உற்று நோக்கிக்கொண்டிருக்கும் பொழுது, என்ன அதிசயம் ! அந்தப் பொம்மையின் கண்களில் ஒன்று சிமிட்டியது போலிருந்தது ! 'சோளக்கொல்லைப் பொம்மையாவது கண் சிமிட்டுவதாவது ?' என்று டோரதி மனதில் எண்ணும் பொழுது அந்தப் பொம்மை அவளைப் பார்த்துத் தலை அசைத்தது ! டோரதி வேலியிலிருந்து இறங்கி, சோளக்கொல்லைப் பொம்மையிடம் போனுள்.

கிட்டே நெருங்கும் டோரதியைப் பார்த்து, "சௌக்கியமா !|" என்று கரகரப்பான குரலில் கேட்டது வைக்கோல் பொம்மை.

"என்ன, நீயா பேசினாய்?" என்று வியப்புடன் கேட்டாள் டோரதி.

"ஆமாம். பேசக்கூடாதா, என்ன? 'நீ சௌக்கியந்தானே,' என்று விசாரித்தேன்," என்றது வைக்கோல் பொம்மை.

"சௌக்கியந்தான். நீ?" என்றாள் டோரதி.

நானா? அதையேன் கேட்கிறாய்? இரவும் பகலும் ஒரு மூங்கிலின்மேலிருந்துகொண்டு காக்கைகளை விரட்டுவது ரொம்பு அலுப்பாயிருக்கிறது," என்றது வைக்கோல் பொம்மை.

"இறங்கி வருகிறதுதானே?" என்றாள் டோரதி.

"எப்படி முடியும்? இந்தக் கழியைத்தான் என் முதுகில் சொருகியிருக்கிறார்களே! இதை நீ எடுத்து விட்டால், உனக்குக் கோடி புண்ணியம்."

டோரதி நெருங்கிச் சென்று, வைக்கோல் மனிதனை மூங்கில் கழியிலிருந்து தூக்கிக் கீழே விட்டாள்.

வைக்கோல் மனிதன் தரையில் தன் கை கால்களை நீட்டி மடக்கி, கொட்டாவி விட்டு ஆசுவாசப்படுத்திக் கொண்டு, "உனக்கு ரொம்ப ரொம்ப நன்றி. நீ யார்? எங்கே போகிறாய்?" என்று கேட்டான்.

"என் பெயர் டோரதி. நான் மரகத நகரத்துக்குப் போகிறேன். ஆஸ் மாயாவியைப் பார்த்து, நான் மறுபடி எங்கள் கான்ஸாஸ் ஊருக்குப் போக வழி கேட்கப் போகிறேன்," என்றாள் டோரதி.

"மரகத நகரம் எங்கே இருக்கிறது? ஆஸ் மாயாவி யார்?"

"இது உனக்குத் தெரியாதா?" என்று டோரதி ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"எனக்கு என்ன தெரியும்? என் உடம்பு முழுவதும் வைக்கோல்தானே! என் தலையில் என்ன மூளையா இருக்கிறது?" என்று வைக்கோல் மனிதன் வருத்தத்துடன் சொன்னான்; பிறகு, "நானும் உன்னுடன் மரகத நகரத்

துக்கு வந்தால், ஆஸ் மாயாவி எனக்குக் கொஞ்சம் மூளை தருவாரோ?'' என்று கேட்டான்.

"எனக்குத் தெரியாது. ஆனால், உனக்கு இஷ்ட மானால் என்னுடன் வா. உனக்கு எல்லா உதவிகளும் செய்யும்படி ஆஸ் மாயாவியைக் கேட்கிறேன்,'' என்றாள் டோரதி.

''நீ ரொம்ப நல்லவள். உனக்கு வந்தனம்,'' என்று வைக்கோல் மனிதன் நன்றியுடன் சொன்னான்.

இருவரும் வயலைவிட்டு ரஸ்தாவை நோக்கி நடந்தார் கள். வைக்கோல் மனிதன் வேலியைத் தாண்ட டோரதி உதவி செய்தாள். இருவரும் மஞ்சள் கல் பாதையில் மரகத நகரத்தை நோக்கிப் பயணமானார்கள்.

அந்தி வேளை நெருங்கியது. அவர்கள் வழியில் ஒரு காடு இருந்தது. பெரிய பெரிய மரங்கள் தங்கள் நீண்ட கிளைகளை முறுக்கிக்கொண்டு பாதையில் வெளிச்சம் விழாமல் தடுத்தன. இருவரும் தைரியத்தைக் கைவிடா மல் காட்டிற்குள் நுழைந்தனர்.

மேலும் ஒருமணி நேரத்தில் நன்றாய் இருட்டி விட் டது. வழியே தெரியவில்லை; தடுமாறினார்கள். டோர திக்குக் கண் தெரியவில்லை. ஆனால், அவளுடைய நாய் தோத்தோவுக்கு வழி தெரிந்தது. சில நாய்களுக்கு இருட்டிலும் கண் தெரியும். வைக்கோல் மனிதனுக்கோ இரவு, பகல் எல்லாம் ஒன்றுதான்; வழி நன்றாய்த் தெரிந் தது. ஆகவே, வைக்கோல் மனிதன் கையைப் பிடித்துக் கொண்டு டோரதி மேலே நடக்கத் தொடங்கினாள்.

கொஞ்சதூரம் போனதும், வைக்கோல் மனிதன், "நமக்கு வலப்புறத்தில் ஒரு சிறிய வீடு தெரிகிறது. அங்கே போகலாமா?" என்று கேட்டான்.

''போவோம். என்னால் நடக்க முடியவில்லை,'' என் றாள் டோரதி.

வைக்கோல் மனிதன் டோரதியைப் பத்திரமாக அந்த வீட்டுக்கு அழைத்துச் சென்றான். அந்த வீட்டில் யாருமே இல்லை. டோரதி உள்ளே பார்த்தாள். ஒரு மூலையில்

காய்ந்த இலைகளாலும் சருகுகளாலும் செய்த படுக்கை ஒன்று இருந்தது. அலுத்துப்போன அந்தச் சிறுமி படுக்கையில் படுத்ததுதான் தாமதம், அயர்ந்து தூங்கிவிட்டாள். சோர்வு என்பதே இல்லாத வைக்கோல் மனிதன் ஒரு மூலையில் சாய்ந்து, எப்போது பொழுது விடியுமென்று காத்துக்கொண்டிருந்தான்.

## 3

டோரதி தூங்கியெழுந்து பார்த்தபோது காலைச் சூரியன் காட்டு மரங்களிடையே பிரகாசித்துக்கொண்டிருந்தது. அந்தச் சிறிய வீட்டை விட்டு விட்டு, காட்டில் கொஞ்ச தூரம் போனார்கள். அங்கே ஒரு சிறிய சுனை இருந்தது. அதன் தெளிவான நீரில் டோரதி குளித்தாள்; பிறகு காலைப் போஜனத்தை முடித்துக்கொண்டாள்.

சாப்பாட்டை முடித்து மஞ்சள் கல் பாதையை நோக்கிப் போகத்தொடங்கிய போது அருகில் யாரோ முனகுவது கேட்டது.

பயந்துபோன டோரதி, "அதென்ன ?" என்று கேட்டாள்.

"என்னவென்று புரியவில்லை ; பக்கத்தில் போய்ப் பார்த்தால் போகிறது," என்றான் வைக்கோல் மனிதன்.

மறுபடி அந்த முனகல் கேட்கத் தொடங்கியது. அவர்கள் இருந்த இடத்துக்குப் பின்னாலிருந்து முனகல் ஓசை வருவதாய்த் தோன்றிற்று. டோரதியும், வைக்கோல் மனிதனும் காட்டில் கொஞ்சதூரம் நடந்து சுற்றுமுற்றும் பார்த்தார்கள். அப்போது சூரிய வெளிச்சத்தில் ஏதோ

பளபளப்பாய்த் தெரிவதை டோரதி கண்டாள் ; என்ன வென்று பார்க்க அதை நோக்கி ஓடினுள் ; ஆச்சரியத் தால் அப்படியே நின்றுவிட்டாள்.

அங்கே, மிகப் பெரிய மரம் ஒன்று பாதி வெட்டப்பட் டிருந்தது. அதன் பக்கத்தில் ஓங்கிய கையில் ஒரு கோடாலியுடன் இரும்பு மனிதன் ஒருவன் நின்றுகொண் டிருந்தான். அவன் உடம்பு, தலே, கால் எல்லாம் இரும் புத் தகடுகளால் செய்யப்பட்டிருந்தன. தலேயும், கைகளும், கால்களும் அசைந்து கொடுக்கும் வகையில் உடம்புடன் இணைக்கப்பட்டிருந்தன. ஆனுல், அந்த இரும்பு மனிதன் துளிகூட அசையாமல் உயர்த்திய கைகளுடன் நின்று கொண்டிருந்தான். அவனுல் அசையவே முடியவில்லே !

"முனகியது நீதானு ?'' என்று டோரதி கேட்டாள்.

"ஆமாம். நானும் ஒரு வருஷத்துக்கு மேலாக முனகிக் கொண்டிருக்கிறேன். கேட்பாரே இல்லே. நல்ல வேளே, நீ கேட்டு, என் உதவிக்கு வந்திருக்கிறுய்,'' என்றுன் இரும்பு மனிதன்.

"உனக்கு என்ன உதவி வேண்டும் ?'' என்றுள் டோரதி.

"எண்ணெய் டப்பாவை எடுத்துக்கொண்டு வந்து, என் கை, கால், கழுத்து, கடைவாய், முழங்கால், கணுக் கால் இணைப்புக்களில் எண்ணெய் ஊற்று. எல்லாப் பூட்டு களும் துருவேறிக் கிடக்கின்றன. எதையும் அசைக்க முடியவில்லே. என் உடலிலுள்ள பூட்டுகளுக்கு எண் ணெய் போட்டவுடன், என் உடம்பு சரியாகி விடும். அதோ உள்ள என் வீட்டில், அலமாரியில் எண்ணெய் டப்பா இருக்கிறது,'' என்றுன் இரும்பு மனிதன்.

டோரதி ஓடிப்போய், வீட்டிலிருந்து எண்ணெய் டப் பாவைக் கொண்டுவந்து, "எங்கே முதலில் எண்ணெய் போடட்டும்?'' என்று கேட்டாள்.

"முதலில் என் கழுத்தில் விடு,'' என்றுன் அவன். டோரதி அவன் கழுத்துப் பூட்டில் எண்ணெய் போட்டாள்.

"இப்போது, என் முழங்கை இணைப்பில் எண்ணெய்

போடு,'' என்ருன். டோரதி அங்கும் எண்ணெய் போட்டாள்.

இரும்பு மனிதன், '' அப்பாடா! '' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு, தன் கையைக் கீழே தாழ்த்திக் கையிலிருந்த கோடாலியைக் கீழே வைத்தான்.

'' இப்போது என் முழங்காலிலும், கணுக்காலிலும் உள்ள பூட்டுகளுக்கு எண்ணெய் போடு. நான் முன் போல நடமாட முடியும். நீ மட்டும் வராமலிருந்தால் நான் துருப்பிடித்து மடிந்து மண்ணுகியிருப்பேன். ஆமாம், நீ எப்படி இங்கே வந்தாய் ? '' என்று இரும்பு மனிதன் கேட்டான்.

'' நாங்கள் மூவரும் ஆஸ் மாயாவியைப் பார்ப்பதற்காக மரகத நகரத்துக்குப் போகிருேம் ; இரவாகி விட்டதால், உன் வீட்டில் தங்கினேம்,'' என்ருள் டோரதி.

'' ஆஸ் மாயாவியை எதற்காகப் பார்க்கப் போகிறீர்கள் ?''

'' நான் எங்கள் கான்ஸாஸ் கிராமத்துக்குத் திரும்ப வேண்டும். ஆஸ் மாயாவிக்குத்தான் வழி தெரியும். என் கூட வருகிற வைக்கோல் மனிதன் ஆஸ் மாயாவியிடம் கொஞ்சம் மூளை கேட்டு வாங்கிக்கொள்ளப் போகிருன் !'' என்று டோரதி சொன்னுள்

இரும்பு மனிதன் சிறிது நேரம் யோசனை செய்து, '' ஆஸ் மாயாவி எனக்கு ஓர் இருதயம் தருவாரா ? '' என்று கேட்டான்.

'' ஏன் மாட்டார் ? வைக்கோல் மனிதனுக்கு மூளையைக் கொடுப்பதாக இருந்தால், உனக்கு ஏன் இருதயம் தரமுடியாது ?'' என்ருள் டோரதி.

''உண்மைதான் ; நீங்கள் சரியென்ருல், நானும் உங்களுடன் மரகத நகரத்துக்கு வந்து ஆஸ் மாயாவியிடம் உதவி கேட்கிறேன்,'' என்ருன் இரும்பு மனிதன்.

டோரதி சந்தோஷத்துடன் சம்மதித்தாள். இரும்பு மனிதன் அவர்களுடன் சேர்ந்துகொண்டதுங்கூட நல்லதாய்ப் போயிற்று. ஏனென்ருல், அவர்கள் காட்டில்

கொஞ்ச தூரம் போனதுமே, காட்டுமரங்களின் கிளைகள் நெருக்கமாயிருப்பதையும், அவர்கள் போவதற்கு வழிகூட இல்லாமல் வளர்ந்திருப்பதையும் கண்டார்கள். இரும்பு மனிதன் தன் கோடாலியைக் கொண்டு மரக்கிளைகளை யெல்லாம் வெட்டித் தள்ளி வழி செய்தான்.

"இந்தக் காட்டைத் தாண்டிப் போக எவ்வளவு காலமாகும்?" என்று டோரதி இரும்பு மனிதனைக் கேட்டாள்.

"எனக்கே தெரியாது. நான் மரகத நகரத்துக்குப் போனதில்லை. ஆனால், நான் சிறுவனாயிருந்தபோது என் தகப்பனார் போயிருக்கிறார். பயங்கரமான வழியில் ரொம்ப தூரம் பிரயாணம் செய்தாக வேண்டும் என்று அவர் சொல்லியிருக்கிறார். ஆனால், எண்ணெய் டப்பா இருக்கும் வரையில் எனக்குப் பயம் என்பதே கிடையாது. வைக்கோல் மனிதனுக்கோ என்ன செய்தாலும் காயம் படாது. உனக்கோ, உன் நெற்றியில் நல்ல தேவதை முத்தமிட்ட அடையாளமிருக்கிறது. உனக்கும் எவ்வித ஆபத்தும் நேராது," என்று இரும்பு மனிதன் சொன்னான்.

"தோத்தோவுக்கு ஆபத்து வந்தால் என்ன செய்வது?" என்று கவலையுடன் கேட்டாள் டோரதி.

"அதற்கு அபாயம் வந்தால் நாமெல்லாரும் காப்பாற்ற வேண்டும்," என்றான் இரும்பு மனிதன்.

அப்படி அவன் சொல்லி வாயை மூடவில்லை. அதற்குள் காடே அதிரும்படி ஒரு கர்ஜனை கேட்டது. அடுத்த வினாடி ஒரு பெரிய சிங்கம் காட்டிற்குள்ளிருந்து பாய்ந்து வந்து பாதையில் நின்றது. அது தன் முன்னங்காலால் வைக்கோல் மனிதனை ஓங்கி அறைந்தது. வைக்கோல் மனிதன் குட்டிக்கரணம் போட்டுக்கொண்டு பாதையோரத்தில் போய் விழுந்தான். சிங்கம் உறுமிக்கொண்டே இரும்பு மனிதனைத் தன் முன்னங்காலால் அறைந்தது. இரும்பு மனிதன் கீழே பாதையில் விழுந்தானேயொழிய அவன் உடலில் காயம் ஏற்படவில்லை. இதைக் கண்டு சிங்கம் ஆச்சரியமடைந்தது. தோத்தோ எதிரி ஒன்றை நேருக்கு நேர் கண்டதும்

ரோஷத்துடன் குரைத்தவண்ணம் சிங்கத்துடன் சண்டை போடப் போயிற்று. சிங்கம் தன் வாயை அகல விரித்து, தோத்தோவைக் கடிப்பதற்காக முன் வந்தது. தோத் தோவைச் சிங்கம் கடித்து விழுங்கிவிடப் போகிறதென்ற பயத்தில், டோரதி, தனக்குள்ள அபாயத்தையும் மறந்த வளாய், ஓடிப்போய்ச் சிங்கத்தின் மூக்கில் ஓங்கி ஓர் அறை வைத்தாள்.

"என் தோத்தோவைக் கடிக்க உனக்கென்ன துணிச்சல்? நீயோ ஒரு பெரிய சிங்கம். சின்னஞ்சிறு நாயைக் கடிக்கப் போகிருயே! உனக்கு வெட்கமாயில்லே? என்று டோரதி இரைந்தாள்.

"நான் ஒன்றும் அதைக் கடிக்கவில்லேயே!'' என்று கூறிக்கொண்டே அச்சிங்கம் தன் முன்னங்காலால் மூக் கில் அடிபட்ட பாகத்தைத் தடவிக்கொண்டது.

"கடிக்கவில்லேயாவது! ஆனுல் கடிக்க வந்தாயா இல்லேயா? நான் அடிக்காதிருந்தால் கடித்தே இருப்பாய். நீ ஒரு பெரிய பயந்தாங்கொள்ளி!" என்று டோரதி கோபித்துக் கொண்டாள்.

சிங்கம் வெட்கத்துடன் தன் தலேயைத் தொங்கப் போட்டுக்கொண்டு, "நீ சொல்வது உண்மைதான். நான் பயந்தாங்கொள்ளி என்பது எனக்குத் தெரியும். ஆனுல், நான் என்ன செய்வது?'' என்றது.

"அது எனக்குத் தெரியாது. பாவம், வெறும் வைக் கோல் திணித்த அந்த வைக்கோல் மனிதனேப் போய் அடித்தாயே! உன்னேப் பற்றி வேறு என்ன நினேக்க முடி யும்?'' என்ருள் டோரதி.

டோரதி, வைக்கோல் மனிதனேத் தூக்கி விட்டு, சிங்கத்தின் அடியினுல் உருமாறிப் போயிருந்த அவன் உடலேச் சரி செய்தாள். சிங்கம் ஆச்சரியத்துடன், "அவன் வைக்கோல் திணித்த மனிதனு?" என்றுகேட்டது.

சிங்கத்திடம், "ஆமாம். அதனுலென்ன?'' என்ருள், டோரதி.

"அந்த இன்னொருத்தனும் இவன் மாதிரிதானா ?" என்று சிங்கம் கேட்டது.

"சேச்சே ! அவன் இரும்பால் செய்யப்பட்ட மனிதன்." அவனையும் டோரதி தூக்கி விட்டாள்.

"அப்படியா ? இப்பொழுது புரிகிறது. அதனால்தான் அவனை அடித்தபோது என் கால் நகமெல்லாம் மழுங்கிப் போய்விட்டது !" என்று சிங்கம் சொல்லிற்று. "அது சரி ; நீ ரொம்ப அருமையாய்ப் பாதுகாக்கிறாயே, அந்தச் சின்ன மிருகம், அது என்ன மிருகம் ?"

"இது தெரியாதா ? அது ஒரு நாய். என் பிரியமான நாய், தோத்தோ ."

"தோத்தோ வைக்கோலால் செய்ததா, இரும்பால் செய்ததா?"

"இரண்டுமில்லை. தோத்தோ... சதையால் ஆன நாய்," என்றாள் டோரதி ; மேலும் சிங்கத்தைப் பார்த்து, "நீ ஏன் இப்படிப் பயந்தாங்கொள்ளியாய் இருக்கிறாய்?" என்றாள்.

"எனக்குத் தெரியாது. நான் பிறவியிலேயே பயந்தாங்கொள்ளியாய்ப் பிறந்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். காட்டிலுள்ள விலங்குகளெல்லாம் என்னை விலங்குகளின் அரசன் என்றும், நான் ரொம்பத் தைரியசாலியாய் இருக்க வேண்டுமென்றும் நினைக்கின்றன. நான் பலமாக உறுமினால் போதும், எல்லா ஜீவராசிகளும் நடுங்கிப் போய், என் வழியை விட்டு ஓட்டமாய் ஓடிப்போகின்றன என்பதைக் கண்டுகொண்டேன். ஆனால், எனக்கு மனிதர்களைக் கண்டால் குலை நடுக்கம் என்பது காட்டு மிருகங்களுக்குத் தெரியாது."

"அது சரியில்லை. விலங்குகளின் அரசனான நீ பயந்தாங்கொள்ளியாய் இருப்பது சரியல்லவே," என்றான் வைக்கோல் மனிதன்.

"எனக்குந்தான் தெரியும். ஆனால், ஆபத்து வந்துவிட்டால் என் இருதயம் படபடவென்று அடித்துக்கொள்கிறதே !" என்றது சிங்கம்.

"ஒருவேளை உனக்கு இருதய நோய் இருக்கிறதோ, என்னவோ!" என்ருன் இரும்பு மனிதன். மேலும், "அப்படி இருந்தால்கூட நீ சந்தோஷப்பட வேண்டும். ஏனென்ருல், இருதய நோய் இருப்பதிலிருந்து, உனக்கு ஓர் இருதயம் இருக்கிறதென்று நிச்சயமாய்த் தெரிகிறதல்லவா? என்னைப் பார். எனக்கு இருதயமே இல்லை; எனக்கு இருதய நோய் வேண்டுமென்ருல்கூட வர முடியாது!" என்ருன் இரும்பு மனிதன்.

"உனக்கு மூளை இருக்கிறதோ?" என்று வைக்கோல் மனிதன் சிங்கத்தைக் கேட்டான்.

"இருக்கிறதென்றுதான் நினைக்கிறேன். ஆனல், நான் தலையைத் திறந்து பார்த்ததில்லை," என்றது சிங்கம்.

"நான் ஆஸ் மகா மாயாவியிடம் போய், கொஞ்சம் மூளைகேட்டு வாங்கிக்கொள்ளப் போகிறேன்," என்ருன் வைக்கோல் மனிதன்.

"எனக்கு ஓர் இருதயம் தரும்படி நான் கேட்கப் போகிறேன்," என்ருன் இரும்பு மனிதன்.

"என்னையும் தோத்தோவையும் கான்ஸாஸுக்குத் திருப்பியனுப்பும்படி நான் கேட்கப் போகிறேன்," என்ருள் டோரதி.

"எனக்கு ஆஸ் மகா மாயாவி கொஞ்சம் தைரியம் தருவாரா?" என்று பயந்தாங்கொள்ளிச் சிங்கம் கேட்டது.

"என்ன பிரமாதம்! எனக்கு மூளை தருவது போல சுலபமாய் உனக்குத் தைரியம் கொடுத்து விடுவார்," என்ருன் வைக்கோல் மனிதன்.

"எனக்கு இருதயம் தருவது போலத்தானே இதுவும்," என்ருன் இரும்பு மனிதன்.

"ஆமாம். எங்களைக் கான்ஸாஸுக்குத் திருப்பியனுப்புவதுபோல் இதுவுந்தான் எளிது," என்ருள் டோரதி.

"அடியோடு தைரியமில்லாமல் வாழ்வது எனக்குச் சகிக்க முடியவில்லை. நீங்கள் சம்மதித்தால், உங்களுடன் சேர்ந்துகொண்டு நானும் ஆஸ் மாயாவியிடம் வருகிறேன்," என்றது சிங்கம்.

இப்படியாக அவர்கள் எல்லாரும் மறுபடியும் மரகத நகரத்தை நோக்கிப் பிரயாணத்தைத் தொடங்கினார்கள்.

## 4

அன்றிரவு அவர்கள் காட்டில் ஒரு பெரிய மரத்தின் கீழே தங்கினார்கள். இலை நிறைந்திருந்த அம்மரம், அவர்கள்மேல் பனி விழாமல் தடுத்தது. இரும்பு மனிதன் தன் கோடாலியைக் கொண்டு நிறைய விறகு வெட்டிக் கொண்டு வந்தான். டோரதி தீ மூட்டி, கணப்பு உண்டாக்கினாள். நெருப்பு கொழுந்து விட்டு எரிந்தது. நெருப்பின் வெப்பம் குளிரை விரட்டி அடித்தது. அதன் வெளிச்சம் இருட்டைப் போக்கித் தனிமையாக உள்ளோமே என்ற கவலையைப் போக்கியது. டோரதியிடமிருந்த ரொட்டியில் பாக்கியிருந்ததை அவளும் தோத்தோவுமாகச் சாப்பிட்டார்கள். காலை உணவிற்கு என்ன செய்வதென்று டோரதிக்கு விளங்கவில்லை.

“ நீ உத்தரவிட்டால் நான் காட்டிற்குள் போய் உனக்காக ஒரு மானை அடித்துக்கொண்டு வருகிறேன். அதை நீ நெருப்பில் வாட்டிக் காலையில் சாப்பிடலாம். உன் வழக்கமெல்லாம் எனக்கு வேடிக்கையாக இருக்கிறது ! மாமிசத்தைப் பச்சையாகச் சாப்பிடாமல் நெருப்பில் வாட்டிச் சாப்பிட வேண்டும் என்கிறாயே !” என்று சிங்கம் சொல்லிற்று.

பிறகு சிங்கம் காட்டிற்குள் போய்விட்டது. அது இரவு என்ன சாப்பிட்டதோ, யாருக்கும் தெரியாது ; அதுவும் சொல்லவில்லை. வைக்கோல் மனிதனோ, ஏதோ ஒரு

மரத்திலிருந்து நிறைய கொட்டைகளை உதிர்த்து, டோரதியிடமிருந்த கூடையில் நிரப்பினான். அதனால் டோரதிக்குப் பசியைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லாமல் போயிற்று.

பொழுது விடிந்ததும் டோரதி ஓர் ஓடையில் தன் முகத்தைக் கழுவிக்கொண்டு வந்தாள். சிறிது நேரத்தில் எல்லாரும் மறுபடி ஆஸ் மாயாவியின் மரகத நகரத்தை நோக்கிக் கிளம்பினார்கள்.

சுமார் ஒரு மணி நேரம் நடந்திருப்பார்கள். அப்போது காட்டை இரு பகுதிகளாகப் பிரிக்கும் வகையில் ஆழமும் அகலமும் மிகுந்த பள்ளம் ஒன்று குறுக்கிட்டது. அந்தப் பள்ளத்தின் பக்கங்கள் அதிகச் செங்குத்தாக இருந்தன. பள்ளத்தில் கீழே இறங்கினால், மேலே ஏறக்கூடும் என்று தோன்றவில்லை.

" இப்போது என்ன செய்யலாம் ?" என்று டோரதி கவலையோடு கேட்டாள்.

"என்ன செய்வதென்று எனக்குத் தெரியவேயில்லை," என்றான் இரும்பு மனிதன். சிங்கம் அடர்ந்த தன் பிடரியை அசைத்துக்கொண்டே ஆழ்ந்த சிந்தனையில் இறங்கி விட்டது. ஆனால், வைக்கோல் மனிதன் ஓர் உபாயத்தைக் கூறினான் : "நம்மால் பறக்க முடியாது ; அது நிச்சயம். இந்தப் பள்ளத்தில் இறங்கினால் ஏறவும் முடியாது. ஆகையால், நாம் தாவிக் குதித்து, அக்கரை அடைய வேண்டியதுதான். இல்லையேல், இருக்கிற இடத்திலேயே இருக்க வேண்டியதுதான் !"

சிங்கம் பள்ளத்தின் அகலத்தைத் தனக்குள் கணக்கிட்டுப் பார்த்துவிட்டு, " இந்தப் பள்ளத்தை என்னால் தாண்ட முடியும் என்று நினைக்கிறேன்," என்றது.

" அப்படியானால் நல்லதாய்ப் போயிற்று. எங்களை ஒவ்வொருவராக முதுகில் நீ ஏற்றிக்கொண்டு சென்று அக்கரையில் சேர்த்துவிடலாம்," என்றான் வைக்கோல் மனிதன்.

" சரி, நான் குதித்துப் பார்க்கிறேன். முதலில் யார்

என் முதுகில் ஏறிக்கொள்ளப் போகிறீர்கள் ?'' என்று சிங்கம் கேட்டது.

'' நான் முதலில் ஏறிக்கொள்கிறேன். ஏனென்ருல், நீ தாவிக் குதிக்கும்போது அக்கரை சேர முடியாமல் கீழே பள்ளத்தில் விழுந்து விட்டால், எனக்கு அடியே படாது; பட்டாலும் வலிக்காது! டோரதியை உன் முதுகில் ஏற்றிச் சென்ருல், பள்ளத்தில் விழும்போது அவள் உயிருக்கே ஆபத்து நேர்ந்துவிடக் கூடும். இரும்பு மனிதனை ஏற்றிச் சென்று அவன் பள்ளத்தில் விழுந்



தாலோ, அவன் உடம்பெல்லாம் நசுங்கிக் காயமாகிவிடும்,'' என்ருன் வைக்கோல் மனிதன்.

சரியென்று சிங்கம் சொல்லவே, வைக்கோல் மனிதன் அதன் முதுகில் ஏறி உட்கார்ந்துகொண்டான். உடனே சிங்கம் பள்ளத்தின் ஓரம் வரை போய் நின்று, பதுங்கிய படி தாவப் பார்த்தது.

மரத்திலிருந்து நிறைய கொட்டைகளை உதிர்த்து, டோரதி யிடமிருந்த கூடையில் நிரப்பினான். அதனால் டோரதிக் குப் பசியைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லாமல் போயிற்று.

பொழுது விடிந்ததும் டோரதி ஓர் ஓடையில் தன் முகத்தைக் கழுவிக்கொண்டு வந்தாள். சிறிது நேரத்தில் எல்லாரும் மறுபடி ஆஸ் மாயாவியின் மரகத நகரத்தை நோக்கிக் கிளம்பினார்கள்.

சுமார் ஒரு மணி நேரம் நடந்திருப்பார்கள். அப்போது காட்டை இரு பகுதிகளாகப் பிரிக்கும் வகையில் ஆழமும் அகலமும் மிகுந்த பள்ளம் ஒன்று குறுக்கிட்டது. அந்தப் பள்ளத்தின் பக்கங்கள் அதிகச் செங்குத்தாக இருந்தன. பள்ளத்தில் கீழே இறங்கினால், மேலே ஏறக்கூடும் என்று தோன்றவில்லை.

"இப்போது என்ன செய்யலாம் ?" என்று டோரதி கவலையோடு கேட்டாள்.

"என்ன செய்வதென்று எனக்குத் தெரியவேயில்லை," என்றான் இரும்பு மனிதன். சிங்கம் அடர்ந்த தன் பிடரியை அசைத்துக்கொண்டே ஆழ்ந்த சிந்தனையில் இறங்கி விட்டது. ஆனால், வைக்கோல் மனிதன் ஓர் உபாயத் தைக் கூறினான் : "நம்மால் பறக்க முடியாது ; அது நிச்ச யம். இந்தப் பள்ளத்தில் இறங்கினால் ஏறவும் முடியாது. ஆகையால், நாம் தாவிக் குதித்து, அக்கரை அடைய வேண்டியதுதான். இல்லையேல், இருக்கிற இடத்திலேயே இருக்க வேண்டியதுதான் !"

சிங்கம் பள்ளத்தின் அகலத்தைத் தனக்குள் கணக் கிட்டுப் பார்த்துவிட்டு, "இந்தப் பள்ளத்தை என்னால் தாண்ட முடியும் என்று நினைக்கிறேன்," என்றது.

"அப்படியானால் நல்லதாய்ப் போயிற்று. எங்களை ஒவ்வொருவராக முதுகில் நீ ஏற்றிக்கொண்டு சென்று அக்கரையில் சேர்த்துவிடலாம்," என்றான் வைக்கோல் மனிதன்.

"சரி, நான் குதித்துப் பார்க்கிறேன். முதலில் யார்

என் முதுகில் ஏறிக்கொள்ளப் போகிறீர்கள் ?'' என்று சிங்கம் கேட்டது.

'' நான் முதலில் ஏறிக்கொள்கிறேன். ஏனென்றால், நீ தாவிக் குதிக்கும்போது அக்கரை சேர முடியாமல் கீழே பள்ளத்தில் விழுந்து விட்டால், எனக்கு அடியே படாது; பட்டாலும் வலிக்காது! டோரதியை உன் முதுகில் ஏற்றிச் சென்றால், பள்ளத்தில் விழும்போது அவள் உயிருக்கே ஆபத்து நேர்ந்துவிடக் கூடும். இரும்பு மனிதனை ஏற்றிச் சென்று அவன் பள்ளத்தில் விழுந்



தாலோ, அவன் உடம்பெல்லாம் நசுங்கிக் காயமாகிவிடும்,'' என்றான் வைக்கோல் மனிதன்.

சரியென்று சிங்கம் சொல்லவே, வைக்கோல் மனிதன் அதன் முதுகில் ஏறி உட்கார்ந்துகொண்டான். உடனே சிங்கம் பள்ளத்தின் ஓரம் வரை போய் நின்று, பதுங்கிய படி தாவப் பார்த்தது.

"தூரத்திலிருந்து ஓடிவந்து தாவுவதுதானே!" என்ருன் வைக்கோல் மனிதன்.

"சிங்கங்கள் அப்படிப் பாய்வதில்லை," என்று கூறி, சிங்கம் துள்ளிக் குதித்து, ஆகாயத்தில் அம்புபோல் பாய்ந்து அக்கரையை அடைந்து விட்டது! வைக்கோல் மனிதன் எதிர்க் கரையில் இறங்கிக்கொண்டதும் சிங்கம் மறுபடி தாவி வந்து, டோரதியின் முன் நின்றது. டோரதி, தன் செல்ல நாய் தோத்தோவை ஒரு கையால் அணைத்த படி சிங்கத்தின் முதுகில் ஏறி உட்கார்ந்து, மற்ருெரு கையால் சிங்கத்தின் பிடரி மயிரைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டாள். அடுத்த நிமிடம் அவள் காற்றில் பறந்து செல்வது போலிருந்தது. அதைப் பற்றி அவள் நினைப்பதற்குள் அவள் பள்ளத்தின் எதிர்க்கரையில் இருப்பதை உணர்ந்தாள். சிங்கம் மறுபடி திரும்பிச் சென்று இரும்பு மனிதனையும் கொண்டுவந்து சேர்த்தது. சிங்கம் இளைப்பாறட்டும் என்று எல்லாரும் சிறிது நேரம் உட்கார்ந்தார்கள். ஆறு தடவை பள்ளத்தைத் தாண்டியதால், சிங்கத்துக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியது; ரொம்ப தூரம் ஓடின ஒரு பெரிய நாயைப் போல அது இரைத்துக் கொண்டு கிடந்தது.

பள்ளத்தின் எதிர்க்கரையில் இருந்த காட்டில் மரங்கள் அடர்த்தியாக வளர்ந்திருந்தன. காடு இருளடர்ந்தும் பயத்தை உண்டாக்குவதாயுமிருந்தது. சிங்கம் ஓய்வெடுத்து முடிந்த பின், அவர்கள் மஞ்சள் கல் பாதை வழியே நடக்க ஆரம்பித்தார்கள். இந்தக் காட்டுக்கு முடிவு என்பது உண்டா? மறுபடியும் சூரிய வெளிச்சத்தைப் பார்ப்போமா என்று ஒவ்வொருவரும் தமக்குள் கவலைப்பட்டபடி நடந்தனர். இது போதாதென்று, காட்டிற்குள்ளிருந்து என்னென்னவோ பயங்கர ஒலிகள் கேட்டு வந்தன. "காட்டின் இந்தப் பகுதியில்தான் கலீடாக்கள் வசிக்கின்றன," என்று சிங்கம் சொல்லிற்று.

"'கலீடா' என்பது என்ன?" என்று டோரதி கேட்டாள்.

"கலீடாக்கள் மாபெரும் பயங்கர விலங்குகள். அவைகளின் உடல் கரடி போலும், தலை புலியைப் போலுமிருக்கும். அவைகளுடைய கால் நகங்கள் நீண்டும் கூர்மையாயுமிருக்கும். தோத்தோவை நான் எப்படி எளிதில் பிய்த்துக் கொன்றுவிட முடியுமோ, அது போலக் கலீடாக்கள் என்னைப் பிய்த்துக் கொன்றுவிட முடியும்! கலீடாக்கள் என்றால் எனக்குச் சிம்ம சொப்பனம்!'' என்றது சிங்கம்.

"நீ சொல்வதைப் பார்த்தால் கலீடாக்கள் மிக மிகக் கொடூரமான பிராணிகளாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. நீ அவைகளைக் கண்டு நடுங்குவதில் ஆச்சரியமில்லை," என்றாள் டோரதி.

இதற்குச் சிங்கம் பதில் சொல்வதற்குள் அவர்களது பாதையின் குறுக்கே மற்றொரு பெரிய ஆறு போன்ற பள்ளம் குறுக்கிடுவதைக் கவனித்தனர். இந்தப் பள்ளத்தைப் பார்த்ததுமே இதைத் தன்னால் தாண்ட முடியாதென்று சிங்கத்துக்குத் தெரிந்துவிட்டது.

என்ன செய்வதென்று யோசனை செய்ய எல்லாரும் அங்கேயே உட்கார்ந்தனர். நீண்ட ஆலோசனைக்குப் பின் வைக்கோல் மனிதன், "இந்தப் பள்ளத்தின் ஓரத்தில் இதோ உயரமானதொரு மரம் இருக்கிறதே! இதை இரும்பு மனிதன் வெட்டிப் பள்ளத்திற்குக் குறுக்கே பாலம் போல விழச் செய்தானானால், நாமெல்லோரும் அதன்மேல் நடந்து சென்று அக்கரையை அடையலாம்,'' என்றான்.

உடனே இரும்பு மனிதன் தன் கோடாலியை எடுத்து மரத்தின் அடிப்பாகத்தில் வெட்ட ஆரம்பித்தான். அவனது கோடாலி கூராக இருந்ததால் சீக்கிரமே அடிமரத்தில் முக்கால் பாகத்தைச் செதுக்கி எறிந்துவிட்டான். சிங்கம் மரத்தின்மீது தன் வலுவான பாதங்களை வைத்து, மூச்சுப் பிடித்துத் தள்ளியது. மரம் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சாய்ந்து, 'படா'ரென்று உடைந்து, பள்ளத்தின்மீது பாலம் போல வீழ்ந்தது.

இந்த மரப்பாலத்தின் வழியாகப் பள்ளத்தைக் கடக்க

எல்லோரும் ஆரம்பித்தனர். அதற்குள் பின்னுல் ஒரு பயங்கர உறுமல் கேட்கவே எல்லாரும் பிரமிப்புடன் திரும்பிப் பார்த்தனர். பின்னுலிருந்து அவர்களை நோக்கி இரண்டு பெரிய மிருகங்கள் ஓடி வந்துகொண்டிருந்தன. அவற்றின் உடல் கரடி போலவும், தலை புலி போலவும் இருந்தன.

"இவைதான் கலீடாக்கள்!" என்று சொல்லிக்கொண்டே பயந்தாங்கொள்ளிச் சிங்கம் நடுநடுங்க ஆரம்பித்தது.

"சீக்கிரம், சீக்கிரம்! நாம் அக்கரைக்குப் போய்விடலாம்!" என்று வைக்கோல் மனிதன் கத்தினுன்.

டோரதி, கையில் தோத்தோவை எடுத்துக்கொண்டு முதலில் பாலத்தைக் கடந்தாள். இரும்பு மனிதன் அடுத்தபடி பின் தொடர்ந்தான். அவனுக்குப் பின் வைக்கோல் மனிதன் சென்ருன். சிங்கத்துக்கு உள்ளூர நடுக்கமென்ருலும், கடைசியாக வந்தது; மேலும், பின் பக்கம் திரும்பி, கலீடாக்களைப் பார்த்து வானமே அதிரும்படி கர்ஜனை செய்தது. அக்கரை போய்விட்ட டோரதிகூடப் பயந்து போனுள். வைக்கோல் மனிதன் கால் தடுமாறி விழுந்தான். பின்னுல் வந்துகொண்டிருந்த பயங்கர மிருகங்களான கலீடாக்கள்கூட ஒரு விநாடி தயங்கி நின்றன. ஆனுல், தாங்கள் சிங்கத்தைவிடப் பெரிய மிருகங்கள் என்பதும், ஒரு சிங்கத்துக்கெதிராய்த் தாங்கள் இரண்டு மிருகங்கள் இருப்பதும் அவைகளுக்கு நினைவுக்கு வந்துவிடவே, அவ்விரு கலீடாக்களும் மேலும் வேகமாய்த் துரத்திவர ஆரம்பித்தன.

சிங்கம் மரப்பாலத்தில் ஓடி அக்கரை அடைந்து, கலீடாக்கள் வருகின்றனவா என்று திரும்பிப் பார்த்தது. கலீடாக்களும் மரப்பாலத்தைக் கடக்கத் தொடங்கிவிட்டது புலனுயிற்று.

"நாம் தப்ப வழியில்லை. அவைகள் நிச்சயம் நம்மைப் பிய்த்துக் கொன்றுவிடும். நீங்கள் முன்னே அக்கரைக்குப் போங்கள். என் உடலில் உயிருள்ளவரை நான் அவர்கள்

முன்னேருமல் தடுத்துப் போரிடுகிறேன்!'' என்றது சிங்கம்.

இதுவரை ஏதோ யோசனை செய்துகொண்டிருந்த வைக்கோல் மனிதன், “எனக்கு ஒரு யோசனை தோன்று கிறது! மரப்பாலத்தின் இந்தப் பக்கத்து முனையை வெட் டித் தள்ளு,'' என்று இரும்பு மனிதனிடம் சொன்னுன். உடனே இரும்பு மனிதன் மரத்தின் ஒரு முனையை வெட்டிச் சிதைத்தான். கலீடாக்கள் மரப் பாலத்தில் பாதிதூரத்துக்குமேல் வந்துகொண்டிருந்தபோது மரம் திடீரென்று முறிந்து அந்தப் பெரும்பள்ளத்தில் விழுந்தது. இரண்டு கலீடாக்களும் பள்ளத்தில் விழுந்து, அடியி லிருந்த கூரான பாறையில் மோதி இறந்தன.

இந்த அனுபவத்திஞல், டோரதியும் தோழர்களும் எப்படியாவது காட்டைவிட்டுச் சீக்கிரமே வெளியேற வேண்டுமென்று விரும்பினுர்கள். நல்ல காலம், அவர்கள் மேலும் செல்லச்செல்ல மரங்களின் அடர்த்தி குறைந்து கொண்டே வந்தது. அவர்களுக்குச் சந்தோஷம் தாங்க வில்லை.

ஆனுல், அன்று பிற்பகல் அவர்களது வழியில் மற் ருேர் இடைஞ்சல் குறுக்கிட்டது! அவர்களுடைய பாதைக்குக் குறுக்கே ஓர் அகலமான ஆறு ஓடிக்கொண் டிருந்தது. நதியின் நீரோட்டம் வெகு வேகமாயிருந்தது. நதியின் எதிர்க்கரையில் காடு இல்லை. அழகான மலர்கள் நிறைந்த புல்வெளிகள் இருந்தன. அவற்றின் வழியே மரகத நகரத்துக்குப் போகும் மஞ்சள் கல் பாதை தெரிந் தது. பாதையின் இருமருங்கிலும் பழங்கள் பழுத்துக் குலுங்கும் கனிமரங்கள் இருந்தன.

“இந்த ஆற்றை எப்படிக் கடப்பது?'' என்ருள் டோரதி.

“இது சுலபம். இரும்பு மனிதன் ஒரு மரத்தை வெட்டி, கட்டுமரம் ஒன்று தயாரித்துக் கொடுக்கட்டும். நாம் அதில் ஏறி எதிர்க்கரைக்குப் போய்விடலாம்,'' என்று வைக்கோல் மனிதன் சொன்னுன்.

இரும்பு மனிதன் அலுப்புச் சலிப்பில்லாமல் வேலை செய்துங்கூட, இருட்டுவதற்குள் கட்டுமரம் தயாராகவில்லை. காலையில் பாக்கிக் காரியங்களைக் கவனிக்கலாம் என்று தீர்மானித்து எல்லாரும் ஒரு மரத்தடியில் இரவைக் கழித்தனர்.

## 5

---

மறுநாள் காலை அவர்கள் எல்லாரும் குதூகலத்துடன் எழுந்திருந்தனர். அவர்கள் கடந்துவிட்ட இருண்ட பயங்கரக் காடு பின்னால் இருந்தது. முன்னாலோ ஓர் அழகான நாடு இருந்தது. அது அவர்களை 'மரகத நகரத்துக்கு வருக' என்று அழைப்பதைப் போலிருந்தது. இரும்பு மனிதன் மேலும் சில மரக்கட்டைகளை வெட்டிக் கட்டுமரம் தயாரித்தான் ; சில நீளமான கழிகளையும் வெட்டி வைத்துக்கொண்டான். எல்லாரும் கிளம்பத் தயாரானார்கள்.

எல்லாரும் கட்டுமரத்தில் ஏறிக்கொண்டனர். அது நீரில் மெதுவாக மிதக்க ஆரம்பித்தது. நதியில் பாதிதூரம் தாண்டியிருப்பார்கள். அப்போது ஆற்றுநீரின் வேகம் அதிகரித்தது. கட்டுமரத்தை ஆறு அடித்துக்கொண்டு போக ஆரம்பித்தது. ஆற்றங்கரையில் மஞ்சள் கல் பாதை வந்து சேருமிடத்திலிருந்து ரொம்ப தூரம் மேற்கே தள்ளிப் போய்விட்டது கட்டுமரம். பெரிய நீளமான கம்புகளைக்கொண்டு கட்டுமரத்தின் போக்கைத் தடுக்க முயன்றும் முடியவில்லை.

"மோசமான நிலையில் இருக்கிறோம். கரையை எட்டிப் பிடிக்காமல் ஆற்றிலேயே அடித்துச் செல்லப்

பட்டால் வழி தவறி, மேல் திசைக் கெட்ட தேவதை நாட்டு எல்லைக்குள் போய்ச் சேர்ந்துவிடுவோம். அவள் நம்மை அடிமையாக்கிக்கொண்டுவிடுவாள்!'' என்று கவலைப்பட்டான் இரும்பு மனிதன்.

''ஆமாம், ஆமாம். கட்டாயம் நாம் மரகத நகரம் போயே தீர வேண்டும்,'' என்று சொல்லிக்கொண்டே வைக்கோல் மனிதன் ஒரு கழியைத் தண்ணீரில் வேகமாகக் குத்தினான். அவன் குத்தின வேகத்தில் அந்தக் கழி சேற்றில் புதைந்துவிட்டது. கட்டுமரமோ ஆற்று வெள்ளத்தில் வேகமாய் அடித்துக்கொண்டு போய் விட்டது. மூங்கில் கழியைப் பிடித்துக்கொண்டிருந்த வைக்கோல் மனிதன் நடு ஆற்றில் கழியிலேயே தொங்கிக் கொண்டிருந்தான். அவனைப் பார்க்கப் பரிதாபமாயிருந்தது.

'' நான் டோரதியை முதலில் பார்த்த போது வயலில் தொங்கிக்கொண்டிருந்தேன். இப்படி நடு ஆற்றில் தொங்குவதைவிட அது எத்தனையோ தேவலை! அங்கே யாவது காக்கைகளை விரட்டிக்கொண்டிருந்தேன். இங்கே யாருக்கும் உபயோகமில்லாமல் தொங்கிக்கொண்டிருக்க வேண்டியதுதான் போலும். இனி, ஆஸ் மாயாவியைக் காணப் போவதுமில்லை; எனக்கு மூளை கிடைக்கப்போவது மில்லை,'' என்று புலம்பினான் வைக்கோல் மனிதன்.

கட்டுமரம் மேலும் மேற்குத் திசையில் நகர்ந்து கொண்டிருந்தது. சிங்கம், '' இப்படியே போய்க்கொண் டிருந்தால் பயனில்லை. நாம் எப்படியாவது கரை சேர வேண்டும். என் வாலை யாரேனும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டால் நான் கட்டுமரத்தையும் இழுத்துக்கொண்டு நீந்திக் கரையை அடைந்துவிடுவேன்,'' என்றது.

சிங்கம் தண்ணீரில் குதித்தது. இரும்பு மனிதன் அதன் வாலைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். சிங்கம் சிறிது சிரமப்பட்டு, கட்டுமரத்தை இழுத்துக் கொண்டு நீச்சலடித்தது. டோரதியும் மூங்கில் கழி ஒன்றை எடுத்துக் குத்தி, கட்டுமரத்தைக் கரைக்குத் தள்ளினாள். கட்டுமரம் கரை சேர்ந்தது. எல்லாரும்

இறங்கினார்கள். சிங்கம் தன் உடலில் இருந்த ஈரம் காய்வதற்காகப் புல்லில் விழுந்து புரண்டது.

"இப்போது நாம் என்ன செய்யலாம்?" என்று கேட்டான் இரும்பு மனிதன்.

"இப்படியே ஆற்றங்கரையோரமாகத் திரும்பி நடப்போம். மஞ்சள் கல் பாதை ஆற்றங்கரையில் சேரும் இடம் வரை நடந்து போவோம்," என்றது சிங்கம்.

சற்று ஓய்வு எடுத்துக்கொண்டதும் எல்லோரும் நடக்கத் தொடங்கினர். டோரதி தன் கூடையைக் கையில் எடுத்துக்கொண்டு கிளம்பினாள். வெகு தூரம் ஆற்றங்கரையோரமாக நடந்த பின், முன்பு விட்டுச் சென்ற பாதையை அடைந்தனர். அப்பொழுது இரும்பு மனிதன் "பார்!" என்று கத்தினான்.

நடு ஆற்றில் மூங்கில் கழியில் பரிதாபமாய்த் தொங்கிக்கொண்டிருந்த வைக்கோல் மனிதனை எல்லாரும் பார்த்தனர். "அவனை எப்படிக் காப்பாற்றுவது?" என்றாள் டோரதி. யாருக்கும் வழி தெரியவில்லை. சிங்கமும், இரும்பு மனிதனும் வழி அறியாமல் தலையை அசைத்தபடி உட்கார்ந்துவிட்டனர். எல்லோரும் ஒன்று கூடி, கவலையுடன், நடு ஆற்றில் மூங்கிலைப் பிடித்துத் தொங்கும் வைக்கோல் மனிதனையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

அப்போது அங்கே ஒரு பெரிய நாரை பறந்து வந்தது; மூவரையும் பார்த்துவிட்டுப் பக்கத்தில் வந்து இறங்கி, "நீங்கள் யார்?" என்று கேட்டது.

"என் பெயர் டோரதி. இவர்கள் என் நண்பர்கள்; இரும்பு மனிதனும், பயந்தாங்கொள்ளிச் சிங்கமும். நாங்கள் எல்லாரும் மரகத நகரம் போய்க்கொண்டிருக்கிறோம்," என்றாள் டோரதி.

நாரை, "அங்கே போக இது சரியான வழி இல்லையே. இன்னும் தள்ளி இருக்கும் மஞ்சள் கல் பாதை வழியாக அல்லவா போக வேண்டும்?" என்றது.

"எங்களுக்குத் தெரியும்," என்றாள் டோரதி.

" ஆனால், எங்கள் நண்பன் வைக்கோல் மனிதன் ந
ஆற்றில் அகப்பட்டுக்கொண்டுவிட்டான். அவனை மீட்கு
வழி அறியாமல் இங்கேயே இருந்து வருகிறோம்," என்றா
டோரதி.

" அப்படியா ! ஐயோ, பாவம்! அவன் எங்கே?" என்று கேட்டது நாரை.

" அதோ பார்!" என்று வைக்கோல் மனிதன் இருந்த இடத்தை டோரதி சுட்டிக் காட்டினாள்.

நாரை வைக்கோல் மனிதனைப் பார்த்துவிட்டு, " அவன் அவ்வளவு பருமனாகவும், கனமானவனாகவும் இல்லாவிட்டால், நானே தூக்கிக்கொண்டு வந்து விடுவேன்," என்றது.

" அவன் கனமே இல்லை ; வெறும் வைக்கோலால் செய்யப்பட்டவன். அவனைத் தூக்கிக் கொணர்ந்து இக் கரையில் சேர்த்தாயானால், என்றென்றும் நன்றி செலுத்துவோம்," என்று டோரதி வேண்டினாள்.

" சரி, நான் அவனைத் தூக்கிப் பார்க்கிறேன். அவன் கனமாக இருந்தால் தொப்பென்று ஆற்றிலேயே போட்டு விடுவேன்," என்று சொல்லிவிட்டு நாரை பறந்து சென்றது; தன் நீண்ட கால்களால் வைக்கோல் மனிதனைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு சில நிமிடங்களுக்குள்ளாகவே அவர்கள் இருந்த இடத்துக்குக் கொண்டு சேர்த்து விட்டது.

மீண்டும் தன் நண்பர்களை அடைந்ததும் வைக்கோல் மனிதன் ஆனந்தத்தால் எல்லாரையும் கட்டித் தழுவிக் கொண்டான். நாரைக்கு எல்லாரும் வந்தனம் செலுத்தினர். நாரை அவர்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு பறந்து சென்றது. எல்லாரும் பூக்கள் நிறைந்த அந்த ஆற்றங்கரை வழியே நடக்க ஆரம்பித்தார்கள்.

# 6

வண்ணப் பறவைகளின் இனிய கீதத்தைக் கேட்டவாறு அவர்கள் நடந்தனர். எங்குப் பார்த்தாலும் அழகான பூக்கள்! பூக்களை மிதித்துக்கொண்டுதான் நடக்க வேண்டியிருந்தது. மஞ்சளும் நீலமும், வெள்ளையும் பழுப்புமாக அப்பூக்களின் நிறம் கண்ணைப் பறித்தது. இவைகளுக்கு நடுநடுவே இரத்தினச் சிவப்பில் கொத்துக் கொத்தாக அபினிப் பூக்கள் காணப்பட்டன.

"என்ன அழகான பூக்கள்!" என்று டோரதி அவற்றின் வாசனையை முகரத் தொடங்கினாள்.

வர வர அபினிப் பூக்களின் எண்ணிக்கை மிகுந்து கொண்டே போயிற்று. மற்ற பூக்கள் குறைந்து காணப்பட்டன. கடைசியில் அபினிப் பூ நிறைந்த ஒரு வயலை அவர்கள் அடைந்துவிட்டார்கள்.

அந்தப் பூக்களைப் பற்றிய ஒரு விஷயம் டோரதிக்குத் தெரியாது. வாசனை நன்றாயிருக்கிறது என்று இந்த அபினிப் பூக்களின் மணத்தை நீண்ட நேரம் சுவாசிப்பவர்களுக்கு அப்படியே மயக்கம் வந்துவிடும். அவர்களை உடனே அங்கிருந்து அகற்றாவிட்டால், மயக்கம் நீடித்து மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்து விடுவார்கள்.

இது தெரியாத டோரதி மலர் மணத்தைச் சுவாசித்துக் கொண்டே நடந்து சென்றாள். திடீரென்று அவள் கண்கள் சுழன்றன; கால்கள் தள்ளாடின. அவள் கீழே உட்கார்ந்தாள்; தரையில் படுத்துத் தூங்கவும் ஆரம்பித்து விட்டாள்.

இரும்பு மனிதன் அவள் அங்கே தூங்குவதைத் தடுத்துப் பார்த்தான். "இந்த மலர்களைவிட்டு நாம் வேகமாய் ஓடிவிட வேண்டும்," என்றான் அவன். வைக்கோல் மனிதனும் அதை ஆமோதித்தான்.

"நாம் டோரதியை இங்கேயே வெகு நேரம் விட்டு வைத்தால், அவள் உயிர் பிழைக்கமாட்டாள். இந்த மலர் மணம் எல்லோரையும் கொல்லப் பார்க்கிறது. எனக்கே மயக்கம் தலைக்கேறிக் கண்களை விழிக்க முடியவில்லை. நாய்க்குட்டி தூங்கியே விட்டது," என்றது சிங்கம்.

ஆமாம்; நாய்க்குட்டி தோத்தோவும் டோரதி பக்கத்திலேயே படுத்துத் தூங்க ஆரம்பித்து விட்டது. வைக்கோல் மனிதனுக்கும் இரும்பு மனிதனுக்கும் உடம்பில் சுவாசமோ சதையோ கிடையாததால், அவர்களை அம் மலரின் மணம் ஒன்றும் செய்யவில்லை.

"ஓட்டம் பிடி. இங்கே நிற்காதே. இந்த மலர்க் காட்டை விட்டு எவ்வளவு வேகமாய் ஓட முடியுமோ அவ்வளவு வேகமாய் ஓடிவிடு. நானும் இரும்பு மனிதனும் டோரதியைத் தூக்கிக்கொண்டு வருகிறோம். டோரதியை எங்களால் தூக்க முடியும்; நீ தூங்கிப் போய்விட்டால், உன்னை எங்களால் தூக்க முடியாது!" என்று சிங்கத்தைப் பார்த்து வைக்கோல் மனிதன் எச்சரித்தான்.

இதன்படி சிங்கம் முடிந்த அளவு வேகத்துடன் ஓடியது; சீக்கிரமே கண்ணுக்கெட்டும் தூரத்துக்கப்பால் போய்விட்டது.

"நாம் இரண்டு பேரும் நம் கைகளைக் கோத்து நாற்காலிபோல் செய்து, அதில் டோரதியை வைத்துக்கொண்டு தூக்கிச் செல்லலாம்," என்றான் வைக்கோல் மனிதன்.

இருவர் கைகளையும் சேர்த்து நாற்காலிபோல் பிணைத்து அதில் டோரதியை ஏந்திச் சென்றனர். டோரதியின் மடியில் படுத்து உறங்கி வந்த தோத்தோவும் தூக்கிச் செல்லப்பட்டது. அவர்கள் மலர்க் காட்டில் கொஞ்ச தூரந்தான் நடந்திருப்பார்கள். அங்கே சிங்கம் பூக்களுக்கிடையே விழுந்து கிடப்பதைக் கண்டார்கள்! மலர்களின் மணத்தில் மயக்கமுற்ற அந்தப் பெரிய சிங்கம் மலர்க் காட்டைக் கடப்பதற்கு முன்பே மயங்கி விழுந்துவிட்டது.

இரும்பு மனிதன் வருத்தத்தோடு, "உம்...நாம் என்ன செய்வது? இந்தச் சிங்கத்தைத் தூக்க நம்மால் முடி

மனது. இப்படியே விட வேண்டியதுதான். பாவம்! ஒரு வேளை தூக்கத்திலாவது தனக்குத் தைரியம் கிடைத்து விட்டதாகக் கனவு காணட்டும்!" என்றான்.

டோரதியைத் தூக்கிக்கொண்டு இருவரும் நதியின் கரையில், விஷப் பூக்களின் வாசனை எட்டாத ஓர் இடத்திற்குச் சென்று, நிழலான ஒரு பக்கத்தில் அவளைப் புல்லில் படுக்க வைத்தனர்; நல்ல காற்றைச் சுவாசித்து அவள் விழித்தெழும் மட்டும் அருகே காத்திருந்தனர்.

"நாம் ஆற்றில் எவ்வளவு தூரம் மேற்கே மிதந்து சென்றோமோ, அவ்வளவு தூரம் கரையோரமாய் நடந்து திரும்பி வந்து விட்டோம். ஆகையால், மஞ்சள் கல் பாதை இங்கேதான் எங்கேயாவது இருக்க வேண்டும்," என்றான் வைக்கோல் மனிதன்.

அதற்குப் பதில் சொல்ல வாயெடுத்த இரும்பு மனிதன் ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். அங்கே ஒரு கொடிய விலங்கு அவர்களை நோக்கிப் பாய்ந்து வந்தது. உண்மையில் அது ஒரு மஞ்சள் நிறக் காட்டுப் பூனை. அது காதை மடக்கிக்கொண்டு வாயைப் பிளந்து, தன் பயங்கரமான பற்களைக் காட்டிக்கொண்டு வருவதைக் கண்டதும் எதையோ துரத்தி வருவது தெரிந்தது. அதன் சிவப்புக் கண்கள் இரண்டும் நெருப்புப் பொறிபோலப் பிரகாசித்தன. அதற்கு முன்னால் பயந்து ஓடிக்கொண்டிருந்த ஒரு சாம்பல் நிற வயல் எலியைக் கவனித்தான் இரும்பு மனிதன். பூனை அவன் பக்கமாக வந்ததும் தன் கோடாலியால் ஓங்கிக் காட்டுப் பூனையை வெட்டிக் கொன்றான்.

வயல் எலி ஓடுவதை நிறுத்தி மெதுவாக இரும்பு மனிதனை நோக்கி வந்தது.

"நன்றி; என் உயிரைக் காப்பாற்றியதற்கு மிக்க நன்றி," என்றது எலி மிகப் பணிவுடன்.

"அதைப் பற்றிப் பேசாதே. எனக்கு இருதயமே கிடையாது, உனக்குத் தெரியுமா? அதனால் உதவி வேண்டியவர்களுக்கெல்லாம் உதவி செய்து, அவர்களது நட்பைப் பெற விரும்புகிறேன். சின்ன எலியாயிருந்தாலும் சரி,

அதற்கு உதவி செய்வது எனக்கு நிரம்ப சந்தோஷம்.'' என்றான் இரும்பு மனிதன்.

வயல் எலிக்குக் கோபம் வந்துவிட்டது.

"என்ன சொன்னாய்! என்னை வெறும் எலி என்று நினைத்தாயா? நான் இந்த வயல் எலிகளுக்கெல்லாம் ராணியாக்கும்!'' என்று கோபத்துடன் கத்தியது அந்தச் சிறிய எலி.

"அப்படியா!'' என்று அந்த எலிக்கு முன் வணங்கி நின்றான் இரும்பு மனிதன்.

"என்னைக் காப்பாற்றியதால் நீ உண்மையாகவே ஒரு பெரிய சாதனையையும், வீரச் செயலையும் செய்திருக்கிறாய்...'' என்று ராணி எலி பேசி முடிப்பதற்குள் அங்கே கணக்கற்ற எலிகள் வந்து கூடிவிட்டன; தங்கள் ராணியைப் பார்த்ததும், "நீங்கள் இறந்தே போய்விடுவீர்கள் என்றல்லவா நினைத்தோம்! எப்படி அந்தக் காட்டுப் பூனையிடமிருந்து தப்பினீர்கள்?'' என்று தலைவணங்கி நின்றன.

"இந்த வேடிக்கையான இரும்பு மனிதர் இருக்கிறாரே, இவர்தான் காட்டுப் பூனையைக் கொன்று என்னைக் காப்பாற்றினார். அதனால் நீங்கள் எல்லாரும் இவர் சொல்வதையெல்லாம் செய்ய வேண்டும், தெரிகிறதா?'' என்றது ராணி எலி.

"நிச்சயம் செய்வோம்,'' என்று எல்லா எலிகளும் ஒரே குரலில் கத்தின.

இவைகள் போட்ட சத்தத்தில் தோத்தோ விழித்துக் கொண்டுவிட்டது; சந்தோஷத்தோடு குரைத்துக் கொண்டே இரும்பு மனிதன் பக்கத்தில் வந்து குதித்தது. அவ்வளவுதான்! எல்லா எலிகளும் ஓடிவிட்டன!

ஆனால், இரும்பு மனிதன் தோத்தோவைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, "திரும்பி வாருங்கள்! திரும்பி வாருங்கள்! தோத்தோ உங்களை ஒன்றும் செய்யாது.'' என்று கூப்பிட்டான்.

"நிச்சயமாக எங்களைக் கடிக்காதே?'' என்று பயந்த குரலில் ராணி எலி கேட்டது.

"நான் தோத்தோவைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறேன். பயப்படாமல் வாருங்கள்."

தயக்கத்தோடு ஒவ்வோர் எலியாகத் திரும்பி வந்தது. பிறகு ஓர் எலி கேட்டது: "எங்கள் ராணியைக் காப்பாற்றியதற்குப் பதிலுக்காக நாங்கள் செய்யக் கூடியது ஏதேனும் இருக்கிறதா?"

"எனக்குத் தெரிந்தது ஒன்றுமில்லை," என்றான் இரும்பு மனிதன். ஆனால், வைக்கோல் மனிதன் அவசர அவசரமாக இடைமறித்து, "எங்கள் நண்பன் பயந்தாங் கொள்ளிச் சிங்கத்தைக் காப்பாற்ற வேண்டும்," என்றான்.

"என்ன சிங்கமா? சிங்கம் எங்களை எல்லாரையும் ஒரேயடியாகச் சாப்பிட்டுவிடுமே!" என்றது இராணி எலி.

"இல்லை, இல்லை. இந்தச் சிங்கம் பயந்தாங்கொள்ளிச் சிங்கம். நீங்கள் அதைக் காப்பாற்றினீர்களானால், சிங்கம் நிச்சயம் உங்களோடு அன்பாய்ப் பழகும்."

"சரி. ஆனால், நாங்கள் என்ன செய்ய வேண்டும்?" என்று ராணி எலி கேட்டது.

"ராணியாரே, உங்களுக்குக் கீழ்ப்படிந்த எலிகள் எத்தனை?"

"ஆயிரக்கணக்கில் இருக்கின்றன."

"ரொம்ப சரி. அவற்றையெல்லாம் உடனே இங்கே வரச் சொல்லுங்கள். வரும்போது ஆளுக்கொரு சிறு கயிறு கொண்டு வரச் சொல்லுங்கள்."

ராணி எலி தன் பணியாள் எலிகளிடம் அவ்வாறே உத்தரவிட்டது.

வைக்கோல் மனிதன் இரும்பு மனிதனைப் பார்த்து, "நீ போய் ஆற்றங்கரையிலுள்ள மரங்களை வெட்டிச் சிங்கத்தை வைத்து இழுத்து வரக் கூடியதாய் ஒரு வண்டியைச் சீக்கிரம் தயார் செய்," என்று கேட்டுக் கொண்டான்.

இரும்பு மனிதன் ஓடோடியும் சென்று, மரங்களை வெட்டி, ஒரு தள்ளு வண்டி தயாரித்தான். எல்லா எலி

களும் வந்து சேருமுன் அவனுடைய வேலை முடிந்து விட்டது.

எலிகள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கில் வர ஆரம்பித்தன. ஒவ்வொன்றும் தன் வாயில் ஒரு துண்டுக் கயிற்றைக் கடித்துக்கொண்டு வந்தது.

அந்தச் சமயத்தில் டோரதியும் தன்னுடைய நீண்ட தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டாள். தான் புல் தரையில் படுத்திருப்பதையும், தன்னைச் சுற்றி ஆயிரக் கணக்கான எலிகள் பணிவோடு நிற்பதையும் பார்த்தவுடன் அவளுக்கு வியப்பு தாங்க முடியவில்லை; ஒன்றும் விளங்காமல் விழித்தாள்.

வைக்கோல் மனிதன் அவளிடம் நடந்தவற்றை எல்லாம் விவரமாகக் கூறினான்; கம்பீரமாக நின்றுகொண்டிருந்த ராணி எலியைக் காண்பித்து, "இவர்தான் மாட்சிமை தங்கிய எலி ராணியார்," என்று டோரதிக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

டோரதி ராணிக்கு மரியாதை தெரிவிக்கும் முறையில் தலையை அசைத்தாள். ராணி எலி டோரதிக்கு வணக்கம் செலுத்தியது. பிறகு அவ்விருவரும் சிறந்த நண்பர்களாகி விட்டனர்.

இதற்குள்ளாக வைக்கோல் மனிதனும் இரும்பு மனிதனும் எலிகள் கொண்டு வந்த கயிற்றுத் துண்டுகளை ஒரு பெரிய வடமாக்கி அதை வண்டியுடன் கட்டினார்கள். அங்குக் கூடியிருந்த எலிகள் அவ்விடத்திலிருந்து தொங்கும் கயிற்றின் முனைகளைப் பிடித்துக்கொண்டன. அவை வண்டியை மிகச் சுலபமாக இழுக்க ஆரம்பித்தன. இரும்பு மனிதனும் வைக்கோல் மனிதனும் வண்டியில் ஏறிக் கொண்ட போதும் எலிகள் மிக வேகமாக இழுத்துச் சென்றன. எல்லோரும் சிங்கம் படுத்திருந்த இடத்தை அடைந்தனர்.

மிகுந்த கஷ்டத்துடன் சிங்கத்தைப் புரட்டி வண்டியில் படுக்க வைத்தனர். உடனே ராணி எலி தன் பரிவாரங்களை நோக்கி, வண்டியை வேகமாய் இழுக்கும்படி

த்தாவிட்டது. ஏனென்றால், தன் பிரஜைகளும் அபினிப் க்கள் நடுவே :வெகு நேரம் இருந்து வந்தால், அவா ளும் மயக்கம் போட்டு விழுவார்கள் என்று பயந்தது.



ஆயிரக்கணக்கான எலிகள் சேர்ந்து இழுத்த போதும் ண்டி முதலில் அசையவில்லை. அதனால் வைக்கோல் னிதனும் இரும்பு மனிதனும் சேர்ந்து பின்னாலிருந்து ள்ளியவுடன் வண்டி கன வேகமாகக் கிளம்பியது. ங்கத்தை சீக்கிரமே விஷப்பூக் காட்டிலிருந்து வெளி யற்றி, நல்ல காற்று உள்ள இடத்துக்குக் கொண்டு ந்து சேர்த்தன எலிகள்.

எல்லா எலிகளும் வடத்துக் கயிற்றை விட்டுத் தத்தம் ளையை நோக்கி ஓடின. ராணி எலி கடைசியாக விடை பெற்றுக்கொண்டது.

"உங்களுக்கு எப்போதாவது உதவி தேவையானால் வயலில் வந்து கூப்பிடுங்கள். நாங்கள் வருவோம்.

ஊர் வரை போனால் அவனுடைய வேலை முடிந்து விட்டது.

எலிகள் எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஆயிரக்கணக் கில் வர ஆரம்பித்தன. ஒவ்வொன்றும் தன் வாயில் ஒரு துண்டுக் கயிற்றைக் கவ்விக்கொண்டு வந்தது.

அந்த சமயத்தில் டோரதியும் தன்னுடைய நீண்ட தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டாள். தான் புல் தரையில் படுத்திருப்பதையும், தன்னைச் சுற்றி ஆயிரக் கணக்கான எலிகள் பணிவோடு நிற்பதையும் பார்த்த வுடன் அவளுக்கு வியப்பு தாங்க முடியவில்லை; ஒன்றும் விளங்காமல் விழித்தாள்.

வைக்கோல் மனிதன் அவளிடம் நடந்தவற்றை எல்லாம் விளக்கமாகக் கூறினான்; கம்பீரமாக நின்றுகொண் டிருந்த ராணி எலியைக் காண்பித்து, "இவர்தான் மாட் சிமை தங்கிய எலி ராணியார்," என்று டோரதிக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

டோரதி ராணிக்கு மரியாதை தெரிவிக்கும் முறையில் தலையை அசைத்தாள். ராணி எலி டோரதிக்கு வணக்கம் செலுத்தியது. பிறகு அவ்விருவரும் சிறந்த நண்பர்களாகி விட்டனர்.

இதற்குள்ளாக வைக்கோல் மனிதனும் இரும்பு மனி தனும் எலிகள் கொண்டு வந்த கயிற்றுத் துண்டுகளை ஒரு பெரிய வடமாக்கி அதை வண்டியுடன் கட்டினார்கள். அங்குக் கூடியிருந்த எலிகள் அவ்விடத்திலிருந்து தொங் கும் கயிற்றின் முனைகளைப் பிடித்துக்கொண்டன. அவை வண்டியை மிகச் சுலபமாக இழுக்க ஆரம்பித்தன. இரும்பு மனிதனும் வைக்கோல் மனிதனும் வண்டியில் ஏறிக் கொண்ட போதும் எலிகள் மிக வேகமாக இழுத்துச் சென்றன. எல்லாரும் சிங்கம் படுத்திருந்த இடத்தை அடைந்தனர்.

மிகுந்த கஷ்டத்துடன் சிங்கத்தைப் புரட்டி வண்டி யில் படுக்க வைத்தனர். உடனே ராணி எலி தன் பரி வாரங்களை நோக்கி, வண்டியை வேகமாய் இழுக்கும்படி

[illegible]



ஆயிரக்கணக்கான எலிகள் சேர்ந்து இழுத்த போதும் வண்டி முதலில் அசையவில்லை. அதனால் வைக்கோல் மனிதனும் இரும்பு மனிதனும் சேர்ந்து பின்னாலிருந்து தள்ளியவுடன் வண்டி கன வேகமாகக் கிளம்பியது. சிங்கத்தை சீக்கிரமே விஷப்பூக் காட்டிலிருந்து வெளியேற்றி, நல்ல காற்று உள்ள இடத்துக்குக் கொண்டு வந்து சேர்த்தன எலிகள்.

எல்லா எலிகளும் வடத்துக் கயிற்றை விட்டுத் தத்தம் வளையை நோக்கி ஓடின. ராணி எலி கடைசியாக விடை பெற்றுக்கொண்டது.

“உங்களுக்கு எப்போதாவது உதவி தேவையானால் வயலில் வந்து கூப்பிடுங்கள். நாங்கள் வருவோம்.

எங்களால் ஆன உதவியைச் செய்வோம்,'' என்று கூறி விடை பெற்றுச் சென்றது ராணி எலி.

''போய் வாருங்கள்,'' என்றனர் எல்லோரும். ராணி எலி ஓடி மறைந்தது.

சிங்கம் விழித்துக்கொள்வதற்காக மற்றவர்கள் காத்திருந்தார்கள்.

# 7

பயந்தாங்கொள்ளிச் சிங்கம் விழித்துக்கொள்ளச் சிறிது நேரம் பிடித்தது. ஆனால் அது கண் விழித்துப் புரண்டு வண்டியிலிருந்து கீழே விழுந்து எழுந்த பின்பே அதற்குத் தான் உயிருடன் இருப்பது தெளிவாயிற்று. "நானும் என்னால் முடிந்தவரை ஓடிப்பார்த்தேன். ஆனால் என்னால் விஷப் பூக்களின் வாசனையிலிருந்து தப்ப முடியவில்லை. நான் மயக்கம் போட்டு விட்டேன். ''அது சரி, என்னை எப்படிக் காப்பாற்றினீர்கள்?" என்று கொட்டாவி விட்டுக்கொண்டே கேட்டது.

வயல் எலிகளைப் பற்றியும், அவை கஷ்டப்பட்டுச் சிங்கத்தைக் காப்பாற்றியது பற்றியும் மற்றவர்கள் சொன்னார்கள். இதைச் சொல்லி முடிப்பதற்குள் மயக்கம் முற்றிலும் தெளிந்து சிங்கம் புத்துணர்ச்சி பெற்றுவிட்டது. எல்லாரும் மேலும் பிரயாணம் செய்யத் தொடங்கினர். விரைவில் மஞ்சள் கல் பாதையை அடைந்து, ஆஸ் மாயாவி வாழும் மரகத நாட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தனர்.

போகப்போக மஞ்சள் கல் பாதையோரமாக வேலிகள் போடப்பட்டிருந்ததை அவர்கள் கண்டார்கள். அந்த

வேலி பச்சை நிறமாயிருந்தது. இன்னும் கொஞ்ச தூரத்தில் ஒரு குடியானவனது வீடு தென்பட்டது. அதற்கும் பச்சை வர்ணம் பூசப்பட்டிருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக நிறைய வீடுகள் தென்பட ஆரம்பித்தன. ஆனால், ஒரு வேடிக்கை என்னவென்றால், எல்லா வீடுகளுக்கும் பச்சை வர்ணம் அடிக்கப்பட்டிருந்தது. சிலர் வீடுகளிலிருந்து வெளியே வந்து, டோரதியையும் மற்றவர்களையும் வேடிக்கை பார்த்து நின்றனர். அவர்கள் எல்லோரும் மரகதப் பச்சை நிறத்தில் உடை உடுத்தியிருந்தனர். அவர்கள் மஞ்சுகின் மக்களைப் போலக் கோபுரம் போன்ற தொப்பிகள் அணிந்திருந்தார்கள்.

" இது நிச்சயம் ஆஸ் மாயாவியின் நாடாக இருக்க வேண்டும். நாம் மரகத நகருக்கு அருகே வந்திருக்கிறோம். எனக்கும் இந்தப் பழங்களைத் தவிர வேறு ஏதாவது சாப்பிட வேண்டும் போல இருக்கிறது. தோத்தோவும் பட்டினியோடு கிடக்கிறது. நாம் அந்த வீட்டில் ஏதாவது கிடைக்குமா என்று விசாரிப்போம், " என்றாள் டோரதி.

பாதையோரத்தில் அடுத்தாற்போல் இருந்த ஒரு வீட்டின் கதவை டோரதி தட்டினாள். ஒரு பெண்மணி கதவைக் கொஞ்சம் திறந்து வெளியே எட்டிப் பார்த்து, " குழந்தாய், உனக்கு என்ன வேண்டும் ? அந்தப் பெரிய சிங்கம் உன்னுடன் ஏன் வருகிறது ! " என்று கேட்டாள்.

" இரவு உங்களுடன் தங்கலாம் என்றிருக்கிறோம். இச்சிங்கம் என் நண்பன். உங்களை ஒரு பொழுதும் ஒன்றும் செய்யாது."

கதவைச் சிறிது மேலும் திறந்துகொண்டே, "நிச்சயம் அது பழகிய சிங்கமா ?" என்று கேட்டாள் அப்பெண்மணி.

" ஓ, ஆமாம் ! அது மட்டுமா ? அது ஒரு பயந்தாங்கொள்ளிச் சிங்கம். பார்க்கப் போனால் நீங்கள் அதைப் பார்த்துப் பயப்பட வேண்டியதற்குப் பதிலாக, அது உங்களைப் பார்த்துப் பயப்படும்," என்றாள் டோரதி.

அப்பெண்மணி சிறிது நேரம் யோசித்தாள். பிறகு

"ரொம்ப விநோதமாக இருக்கிறதே! எதாவது ஒரு வகையில் அவரைப் பார்த்தே ஆக வேண்டும். இல்லா விட்டால், இவ்வளவு தொலைவு பிரயாணம் செய்து வந்தது வீணாகிவிடும்," என்றாள் டோராதி.

"நீங்கள் எதற்காக அவரைப் பார்க்க விரும்பு கிறீர்கள்?" என்று கேட்டான் அம்மனிதன்.

"எனக்குக் கொஞ்சம் மூளை தரும்படி அவரை நான் கேட்கப் போகிறேன்," என்று வைக்கோல் மனிதன் ஆவ லோடு சொன்னான்.

"ஓ, ஆஸ் மாயாவி உனக்கு நிச்சயம் மூளையைக் கொடுப்பார். ஏனென்றால், அவரிடம் தேவைக்கு அதிக மாக மூளை இருக்கிறது," என்றான் அம்மனிதன்.

"நான் அவரிடம் ஒரு இருதயம் கேட்கப் போகி றேன்," என்றான் இரும்பு மனிதன்.

"அதைக் கொடுப்பது அவருக்கு மிக எளிது. ஏனென்றால், அவர் கணக்கற்ற இருதயங்களைச் சேர்த்து வந்துள்ளார். அவ்விருதயங்கள் பல வகைகளிலும் பல அளவுகளிலும் உள்ளன," என்றான் அம்மனிதன்.

"நான் அவரிடம் கொஞ்சம் தைரியம் தரும்படிக் கேட்கப் போகிறேன்," என்றது பயந்தாங்கொள்ளிச் சிங்கம்.

"ஆஸ் மாயாவி தம் சிம்மாசன அறையில் ஒரு பெரிய பாத்திரம் நிறைய தைரியம் வைத்திருக்கிறார்; அது வெளியே வழிந்து போகாமல் தடுக்க ஒரு தங்கத் தட்டைப் போட்டு மூடி வைத்திருக்கிறார். அவர் சந்தோஷமாக உனக்குக் கொஞ்சம் கொடுக்க முன்வருவார்."

"என்னைத் திரும்ப எங்கள் ஊரான கான்ஸாஸுக்கு அனுப்பும்படிக் கேட்கப் போகிறேன்," என்றாள் டோராதி.

"கான்ஸாஸா? அது எங்கே இருக்கிறது?" என்று அம்மனிதன் ஆச்சரியத்தோடு கேட்டான்.

"அது எந்த இடத்தில் உள்ளதென்று குறிப்பாக எனக்குத் தெரியாது. ஆனால், அங்கேதான் எங்கள் வீடு

சிங்கத்தை ஒரு முறை பார்த்துவிட்டு, "நீ சொல்வது நிச்சயமாக உண்மையானால் நீங்கள் இன்றிரவு இங்கே தங்கலாம். நான் உங்களுக்குச் சாப்பாடும் படுக்க இடமும் தருகிறேன்," என்றாள்.

எல்லாரும் வீட்டிற்குள் நுழைந்தனர்.

அந்த வீட்டில் அப்பெண்மணியைத் தவிர ஒரு மனிதனும் இரண்டு குழந்தைகளும் இருந்தனர். அந்த மனிதனுக்குக் காலில் அடி பட்டிருந்ததால், அவன் ஒரு மூலையில் இருந்த கட்டிலில் படுத்திருந்தான். டோரதியை யும், அவளது நண்பர்களையும் பார்த்ததும் வீட்டிலுள்ள வர்கள் வியப்புற்றனர். பெண்மணி சாப்பாட்டிற்கு ஏற் பாடு செய்யும்பொழுது, வீட்டின் சொந்தக்காரன் டோரதி யைப் பார்த்து, "நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டான்.

"ஆஸ் மாயாவியைப் பார்க்க மரகத நகரத்திற்குப் போகிறோம்," என்றாள் டோரதி.

"நிஜமாகவா? உங்களைப் பார்க்க ஆஸ் மாயாவி சம்மதிப்பாரோ?"

"ஏன் மாட்டார்?" என்று கேட்டாள் டோரதி.

"ஏனென்றால், அவர் தம் முன் எவரையும் வருவ தற்கு அனுமதி தருவதில்லை. நான்கூட மரகத நகரத் திற்குப் பல தடவைகள் போயிருக்கிறேன். ஆனால், ஒரு தடவைகூட ஆஸ் மாயாவியைப் பார்க்க அனுமதி கொடுக்கவில்லை, வேறு யாரும் பார்த்ததாகவும் கேள் விப்பட்டதில்லை."

"அவர் பார்ப்பதற்கு எப்படி இருப்பாராம்?" என்று டோரதி கேட்டாள்.

"எப்படி இருப்பார் என்று சொல்வது கடினம். ஏனென்றால் ஆஸ் ஒரு பெரிய மாயாவியாயிற்றே! அவர் நினைத்த உருவத்தையெல்லாம் எடுக்கும் வல்லமை உடையவர். எது அவரது நிஜ உருவம், எது அவர் எடுக்கும் மாய உருவம் என்று எவராலும் கூற முடியாது. அதனால் அவரைப் பார்த்ததாக யார் கூற முடியும்?"

"ரொம்ப விநோதமாக இருக்கிறதே! ஏதாவது ஒரு வகையில் அவரைப் பார்த்தே ஆக வேண்டும். இல்லா விட்டால், இவ்வளவு தொலைவு பிரயாணம் செய்து வந்தது வீணாகிவிடும்," என்றாள் டோரதி.

"நீங்கள் எதற்காக அவரைப் பார்க்க விரும்பு கிறீர்கள்?" என்று கேட்டான் அம்மனிதன்.

"எனக்குக் கொஞ்சம் மூளை தரும்படி அவரை நான் கேட்கப் போகிறேன்," என்று வைக்கோல் மனிதன் ஆவ லோடு சொன்னான்.

"ஓ, ஆஸ் மாயாவி உனக்கு நிச்சயம் மூளையைக் கொடுப்பார். ஏனென்றால், அவரிடம் தேவைக்கு அதிக மாக மூளை இருக்கிறது," என்றான் அம்மனிதன்.

"நான் அவரிடம் ஒரு இருதயம் கேட்கப் போகி றேன்," என்றான் இரும்பு மனிதன்.

"அதைக் கொடுப்பது அவருக்கு மிக எளிது. ஏனென்றால், அவர் கணக்கற்ற இருதயங்களைச் சேர்த்து வந்துள்ளார். அவ்விருதயங்கள் பல வகைகளிலும் பல அளவுகளிலும் உள்ளன," என்றான் அம்மனிதன்.

"நான் அவரிடம் கொஞ்சம் தைரியம் தரும்படிக் கேட்கப் போகிறேன்," என்றது பயந்தாங்கொள்ளிச் சிங்கம்.

"ஆஸ் மாயாவி தம் சிம்மாசன அறையில் ஒரு பெரிய பாத்திரம் நிறைய தைரியம் வைத்திருக்கிறார்; அது வெளியே வழிந்து போகாமல் தடுக்க ஒரு தங்கத் தட்டைப் போட்டு மூடி வைத்திருக்கிறார். அவர் சந்தோஷமாக உனக்குக் கொஞ்சம் கொடுக்க முன்வருவார்."

"என்னைத் திரும்ப எங்கள் ஊரான கான்ஸாஸுக்கு அனுப்பும்படிக் கேட்கப் போகிறேன்," என்றாள் டோரதி.

"கான்ஸாஸா? அது எங்கே இருக்கிறது?" என்று அம்மனிதன் ஆச்சரியத்தோடு கேட்டான்.

"அது எந்த இடத்தில் உள்ளதென்று குறிப்பாக எனக்குத் தெரியாது. ஆனால், அங்கேதான் எங்கள் வீடு

இருக்கிறது. கான்ஸாஸ் எங்கோ ஓர் இடத்தில் இருப்பது நிச்சயம்,'' என்றாள் டோரதி.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது வீட்டுக்காரி அவர்களை இரவுச் சாப்பாட்டிற்கு அழைத்தாள். அவர்கள் எல்லோரும் மேஜையைச் சுற்றி வட்டமாக உட்கார்ந்து சாப்பிடத் தொடங்கினர்.

அவர்களின் சாப்பாடு முடிந்ததும் வீட்டுக்காரி டோரதி படுத்துக்கொள்வதற்கு ஒரு படுக்கையைக் கொடுத்தாள். தோத்தோவும் அவள் பக்கத்திலேயே படுத்துக் கொண்டது. சிங்கம் அவ்வறையின் வாசலில் காவல் காத்தவாறு படுத்துக்கொண்டது. வைக்கோல் மனிதனும் இரும்பு மனிதனும் அறையின் ஒரு மூலையில் பேசாமல் சாய்ந்துகொண்டு, எப்போது பொழுது விடியும் என்று காத்திருந்தார்கள்.

மறு நாள் காலை விடியும்போதே அவர்கள் பிரயாணத்தைத் தொடங்கிவிட்டனர். சிறிது தூரத்தில் அவர்கள் தமக்கு முன்னால் வானில் பச்சை நிற ஒளி பிரகாசிப்பதைக் கண்டனர்.

"அதுதான் மரகத நகரமாயிருக்கும்,'' என்றாள் டோரதி.

அவர்கள் நடக்க நடக்க அந்தப் பசுமையான ஒளி மேலும் மேலும் பிரகாசமாகத் தெரிய ஆரம்பித்தது. ஆயினும், அவர்கள் மரகத நகரின் கோட்டை வாயிலை அடையும்பொழுது அந்தி வேளை நெருங்கிவிட்டது. கோட்டையின் மதில் பெரியதாகவும், பச்சை வர்ணம் பூசப்பட்டும் காணப்பட்டது.

மஞ்சள் கல் பாதை கோட்டையின் வாயிலில் முடிவுற்றது. வாயிற்கதவுகள் முழுவதும் அழகான மரகதக் கற்கள் பதிக்கப் பெற்றிருந்தன. கதவுக்குப் பக்கத்திலேயே ஒரு மணியும் இருந்தது. டோரதி அந்த மணியை அடித்ததும் கணகணவென்று இனிமையான மணியோசை கேட்டது. உடனே அப்பெரிய கதவு மெதுவாகத் திறந்தது. அவர்கள் எல்லோரும் உள்ளே சென்றனர்.

உள்ளே ஒரு பெரிய அறை இருந்தது. அந்த அறையின் சுவரில் எங்குப் பார்த்தாலும் கண்ணைப் பறிக்கும் மரகதக் கற்கள் பதிக்கபபட்டு ஜொலித்துக்கொண்டிருந்தன!

அவாகளுககு எதிரே, மஞ்சுகின் மக்களது உயரமே உள்ள ஒரு மனிதன் நின்றான். அவனுடைய சட்டை, கால்சட்டை எல்லாம் பச்சை நிறமாக இருந்தன. அவனுக்குப் பக்கததிலிருந்த பெட்டியும் பச்சை நிறமாய் இருநதது. அவனே கொஞ்சம் பசுமை நிறமாய்க் காணப் பட்டான்.

டோரதியையும் மற்றவர்களையும் பார்த்து அக்காவல் காரன், "மரகத நகரில் உங்களுக்கு என்ன வேலை?" என்று கேட்டான்.

"நாங்கள் ஆஸ் மாயாவியைப் பார்க்க வந்திருக் கிறோம்," என்றாள் டோரதி.

"நிஜமாகவே, ஆஸ் மாயாவியைப் பார்க்க வேண்டும் என்று தைரியமாக ஒருவா சொல்லக் கேட்டுப் பல ஆண்டுகளாகின்றன," என்று தலையை அசைத்துக் கொண்டே கூறினான் அக்காவலாளி. "அவர் மிகச் சக்தி படைத்தவர். நீங்கள் பொழுது போகாமல் பைத்தியக் காரத்தனமான காரியத்தை முன்னிட்டு அவரைச் சந்தித்து அவருடைய சிந்தனையைக் கலைக்கத் துணிந்தால் அம்மாபெரும் மாயாவி கோபம் மேலிட்டு உங்கள் எல்லோரையும் ஒரே நொடியில் அழித்து விடுவார்."

வைக்கோல் மனிதன், "நாங்கள் பைத்தியக்காரத்தன மாகவோ, பொழுது போகாமலோ இங்கு வரவில்லை. நாங் கள் வந்த வேலை முக்கியமானதும், அவசரமானதுங்கூட. ஆஸ் மாயாவி ரொம்ப நல்லவர் என்று அல்லவா நான் கேள்விப்பட்டிருக்கிறேன்," என்றான்.

"அவர் நல்லவர்தான். ஆனால், முக்கியமான காரணத்துடன் அவரைப்பார்க்க வராமல் வேடிக்கைக்காக அவரைப் பார்க்க முயன்றவர்களிடம் அவர் கொடூரமாக மாறுவார். இது வரையில் அவர் முகத்தைப் பார்க்க எவரும் துணிந்ததில்லை. நான் காவல் காப்போன்.

நீங்கள் நிச்சயம் அவரைப் பார்க்க வேண்டும் என்று சொல்வதால் உங்களைக் கூட்டிக்கொண்டு போகிறேன். ஆனால், அதற்கு முன்னால் நீங்கள் இந்தக் கண்ணாடிகளைப் போட்டுக்கொள்ள வேண்டும்," என்றான் அக் காவல்காரன்.

"கண்ணாடிகளா! எதற்கு?" என்று கேட்டாள் டோரதி.

"இக்கண்ணாடிகளை நீங்கள் போட்டுக்கொள்ளா விட்டால் மரகத நகரில் வீசும் ஒளி உங்கள் கண்களைக் குருடாக்கிவிடும்," என்று சொல்லிக்கொண்டே பக்கத்தி லிருந்த பெரிய பெட்டி ஒன்றை அக்காவல்காரன் திறந்தான். அதற்குள் பல அளவுகளில் மூக்குக் கண்ணாடிகள் இருப்பதை டோரதி கண்டாள். காவல்காரன் டோரதியின் கண்களுக்கு ஏற்ற ஒரு கண்ணாடியை எடுத்து அவள் கண்களில் பொருத்தினான். கண்ணாடிகளின் பக்கவாட்டில் இரு தங்கத் தகடுகள் இருந்தன. அவற்றைத் தலையின் பின்புறம் கொண்டுசென்று, ஒன்றாகச் சேர்த்து, ஒரு சிறு பூட்டால் பூட்டிவிட்டுச் சாவியைத் தன் கழுத்திலிருந்த சங்கிலியில் தொங்கவிட்டுக்கொண்டான். இப்படியே அவன் வைக்கோல் மனிதன், இரும்பு மனிதன், பயந்தாங்கொள்ளிச் சிங்கம் எல்லாருக்கும், ஏன் தோத்தோவுக்குங்கூட, பச்சை நிறக்கண்ணாடிகளை மாட்டிப் பூட்டிவிட்டான்; பிறகு தன்னுடைய கண்ணாடிகளையும் மாட்டிக்கொண்டான்.

பிறகு கோட்டைக் காவலாளி "அரண்மனையைக் காட்டுகிறேன். என்னுடன் வாருங்கள்," என்று அழைக்க, அவர்கள் அவனைப் பின் தொடர்ந்து சென்றனர்.

# 8

டோரதியும் அவள் நண்பர்களும் மரகத நகரத்தின் வழியாக நடந்தனர். அவர்கள் பச்சைக் கண்ணுடிகளைப் போட்டுக்கொண்டிருந்தும் அவர்கள் கண்கள் அந்த நகரத்திலிருந்து வெளியான பிரகாசத்தால் கூசின. மரகத நகரின் தெருக்களில் ஆண் பெண் குழந்தைகள் கூட்டம் கூட்டமாகச் சென்றுகொண்டிருந்தனர். அவர்கள் யாவரும் பச்சை உடைகளையே அணிந்திருந்தனர். அவர்களுடைய உடலின் நிறமும் பச்சையாகத் தென்பட்டது. அவர்கள் யாவரும் டோரதியையும், அவளது நண்பர்களையும் வியப்புடன் விழித்து விழித்துப் பார்த்தனர். சிங்கத்தைக் கண்ட சிறு குழந்தைகள் பயந்து ஓடி, அவரவர்கள் தாய்மார்களுக்குப் பின்னே ஒளிந்துகொண்டன.

அந்நகரத்தில் குதிரைகளோ மற்ற விலங்குகளோ ஒன்றும் காணப்படவில்லை. மக்கள் தங்களது பொருள்களைப் பச்சை நிற வண்டிகளில் வைத்துத் தள்ளிக் கொண்டு போனார்கள். எல்லோரும் திருப்தியாகவும் சந்தோஷமாகவும் காணப்பட்டனர்.

அவர்கள் பல தெருக்களின் வழியே சென்று கடைசியில் ஒரு பெரிய கட்டடத்தின் வாயிலை அடைந்தனர். அது கிட்டத்தட்ட மரகத நகரத்தின் நடுவில் இருந்தது. அதுவே ஆஸ் மாயாவியின் அரண்மனை.

அவ்வரண்மனையின் வாயிலிலே பச்சை நிற உடை அணிந்த ஒரு சிப்பாய் நின்றுகொண்டிருந்தான். அவனுக்கு நீளமான பச்சை நிறத் தாடி இருந்தது!

“இவர்கள் மரகத நகருக்குப் புதியவர்கள். இவர்கள் ஆஸ் மாயாவியைப் பார்க்க வேண்டும் என்கிறார்கள்,” என்றான் கோட்டைக் காவலாளி அச்சிப்பாயைப் பார்த்து.

"உள்ளே வாருங்கள். நான் போய் ஆஸ் மாயாவி யிடம் நீங்கள் வந்துள்ள செய்தியைச் சொல்லி வருகி றேன். நான் சிம்மாசன அறைக்குச் சென்று வரும் வரை இப்படி உட்காருங்கள்," என்று சொல்லிவிட்டு, அந்தச் சிப்பாய் உள்ளே போனன்.

அவன் திரும்பி வருவதற்கு அதிக நேரம் ஆயிற்று. கடைசியில் அவன் திரும்பி வந்தான்.

"என்ன? ஆஸ் மாயாவியைப் பார்த்தாயா?" என்ருள் டோரதி.

"அது முடியுமா, என்ன? அவரை நான் பார்த்ததே யில்லை! ஆனல், அவரோடு பேசி இருக்கிறேன். அவர் ஒரு திரைக்குப் பின்னலிருந்துதான் எப்போதும் பேசுவார். அவர் அறைக்கு நீங்கள் வர அனுமதி தந்திருக்கிருர். ஆனல், நீங்கள் ஒரு நாளைக்கு ஒருவராகத்தான் போக வேண்டும். நீங்கள் எல்லோரும் அவரைச் சந்திக்கப் பல நாள் ஆகும். அதுவரை நீங்கள் இந்த அரண்மனையிலேயே தங்கலாம். ஒவ்வொருவருக்கும் தங்குவதற்கு ஓர் அறை ஏற்பாடு செய்கிறேன்."

இப்படிச் சொல்லிவிட்டு அரண்மனை வீரன் ஒரு பச்சை நிற ஊதலை எடுத்து ஊதினன். உடனே அங்கே ஒரு பணிப்பெண் வந்து அவர்களை வணங்கினள். டோரதி யைப் பார்த்து அவள், "தயவு செய்து என்னுடன் வாருங் கள். உங்கள் அறைகளைக் காண்பிக்கிறேன்," என்ருள்.

டோரதியின் அறை மிக அழகாக இருந்தது. அங்கே பச்சைப் பட்டுத் திரைச்சீலைகள் தொங்கின. பச்சை வெல்வெட் மெத்தையும், பச்சைப் பட்டுப் போர் வையும் இருந்தன. அலமாரியில் பச்சை நிறத்தில் பல ஆடைகள் இருந்தன.

"இதுதான் உங்கள் அறை. இங்கே நீங்கள் இளைப் பாறுங்கள். உங்களுக்கு ஏதேனும் வேண்டுமென்ருல் அந்த மணியை அடியுங்கள். ஆஸ் மாயாவியை நீங்கள் நாளைக்குப் பார்க்கலாம்," என்ருள் அப்பணிப்பெண்.

டோரதியை அந்த அறையில் விட்டுவிட்டு அப்பணிப் பெண் மற்றவர்களிடம் சென்ருள் ; அவர்களையும் ஒவ் வோர் அறையில் அமர்த்திஞள்.

மறுநாள் காலை உணவுக்குப் பிறகு டோரதியை அழைத்துப் போகப் பணிப்பெண் வந்தாள் ; டோரதிக்கு அழகான ஓர் உடையை அணிவித்து அலங்காரம் செய்தாள். பிறகு இருவருமாக ஆஸ் மாயாவி பேட்டி காணும் அறைக்குச் சென்ருர்கள்.

அங்கே அவர்கள் சென்றதும் ஒரு மணி அடித்தது. உடனே பச்சை நிறப் பணிப்பெண், "இதுதான் நீங்கள் உள்ளே செல்லலாம் என்பதற்கு அடையாளம். நீங்கள் உள்ளே போகலாம்," என்று சொல்லிக்கொண்டே ஒரு சிறு கதவைத் திறந்தாள். டோரதி தைரியமாக உள்ளே போஞள். அறை மிகவும் அழகாக இருந்தது. அறையின் நடுவே இரத்தினங்களும் மாணிக்கங்களும் மரகதங்களும் பதிக்கப் பெற்று வேலைப்பாடோடு கூடிய ஒரு சலவைக்கல் சிம்மாசனம் இருந்தது. அதன் நடுவே ஒரு பெரிய தலைமட்டும் தெரிந்தது. உடம்பின் மற்ற பாகங்களே இல்லை ! கை, கால், உடல் ஏதும் இல்லை ! தலையில் மயிரே இல்லை ! வெறும் வழுக்கை. அது பெரிய ராட்சஸனுடைய தலையைவிடப் பெரிதாக இருந்தது. அத்தலையில் பெரிய பெரிய கண்கள், நீண்ட மூக்கு எல்லாம் இருந்தன.

டோரதிக்கு ஒரே ஆச்சரியம்! அவள் அந்தத் தலை யை வியப்போடு பார்த்துக்கொண்டிருக்கும்போதே அந்த ராட்சஸத் தலையின் கண்கள் அவளை உற்றுப் பார்த்தன ; உதடுகள் அசையத் தொடங்கின. உடனே ஒரு குரல் எழும்பியது.

"நானே மாபெரும் பயங்கர ஆஸ் மாயாவி. நீ யார்? என்னை ஏன் தேடி வந்தாய் ?"

"நான் ஒரு சிறு பெண். என் பெயர் டோரதி. உங்களது உதவியை நாடி வந்திருக்கிறேன்."

ஒரு நிமிடம் அந்தக் கண்கள் ஆட்டமின்றி அவளையே பார்த்தன. மறுபடியும் அந்தக் குரல் எழுந்தது.

"உனக்கு அந்த வெள்ளிப் பாதரட்சைகள் எப்படிக் கிடைத்தன ?"

"அது கிழக்குத் திசைக் கெட்ட தேவதையினுடையது. என் வீடு அவள்மேல் விழுந்து அவளைக் கொன்றுவிட்டது!" என்றாள் டோரதி.

"உன் நெற்றியில் எப்படி இந்த அடையாளம் ஏற்பட்டது ?"

"வடதிசை நல்ல தேவதை என்னை முத்தமிட்டு உங்களிடம் அனுப்பினாள். அவள் முத்தமிட்ட அடையாளமே அது."

அந்தக் கண்கள் அவளையே சிறிது நேரம் மறுபடி உற்றுப் பார்த்தன. பிறகு மீண்டும் ஆஸின் குரல் எழுந்தது.

"உனக்கு நான் என்ன செய்ய வேண்டும் ?"

"என்னைத் திரும்பக் கான்ஸாஸுக்குக் கொண்டு போய் என் பெரியப்பா - பெரியம்மாவிடம் சேர்த்துவிட வேண்டும்."

"நான் எதற்காக உனக்கு இந்த உதவியைச் செய்ய வேண்டும் ?"

"ஏனென்றால், நீங்கள் எல்லாம் வல்லவர். நானோ பலமற்றவள். நீங்களோ ஒரு மாபெரும் மாயாவி. நானோ ஒன்றும் அறியாத சிறுமி," என்று பணிவுடன் கூறினாள் டோரதி.

"நீதான் கீழ்த்திசைக் கெட்ட தேவதையைக் கொல்லக் கூடிய பலம் படைத்தவளாயிற்றே !" என்றார் ஆஸ்.

"இல்லையில்லை. அது தற்செயலாக நடந்த நிகழ்ச்சி !" என்றாள் டோரதி.

"டோரதி, நான் எனது மந்திர சக்தியை உபயோகித்து உன்னைக் கான்ஸாஸுக்கு அனுப்ப வேண்டுமானால், எனக்காக நீ முதலில் ஒன்று செய்ய வேண்டும்."

"நான் என்ன செய்ய வேண்டும் ?"

" நீ மேற்குத் திசைக் கெட்ட தேவதையைக் கொல்ல வேண்டும்!" என்று கட்டளையிட்டார் ஆஸ் மாயாவி.

" அது என்னுல் முடியாதே!"

" கிழக்குத் திசைக் கெட்ட தேவதையை நீ கொன்று, அவளது மந்திரசக்தி வாய்ந்த வெள்ளிப் பாதரட்சைகளை அணிந்துகொண்டிருக்கிருய். இந்த உலகத்திலேயே இன்னும் ஒரே ஒரு கெட்ட தேவதைதான் இருக்கிருள். அவள் இறந்த செய்தியை என்னிடம் வந்து கூறியதும், நான் உன்னைக் கான்ஸாஸுக்கு அனுப்புவேன். அதற்கு முன்னுல் உன்னை அனுப்ப முடியாது. நீ இங்கிருந்து போகலாம்."

இதைக் கேட்ட டோரதி அழத் தொடங்கினுள். " நான் இதுவரை யாரையும் வேண்டுமென்று கொன்றதில்லை. இப்போது நான் அப்படியே விரும்பினுலும் அந்த மேற்குத் திசைக் கெட்ட தேவதையை எப்படிக் கொல்ல முடியும்? எல்லாம் வல்ல ஆஸ் மாயாவியான நீங்களே அவளைக் கொல்ல முடியவில்லையென்றுல், என்னுல் எப்படி அவளைக் கொல்ல முடியும்?"

" எப்படிச் செய்வாயோ எனக்குத் தெரியாது. ஆனுல், மேற்குத் திசைக் கெட்ட தேவதை இறந்தாலொழிய நீ உன் பெரியப்பாவையும் பெரியம்மாவையும் பார்க்க முடியாது. நீ இங்கிருந்து போகலாம். நீ உனக்கு இடப்பட்ட வேலையை முடிக்காமல் என்னைப் பார்க்க வராதே, போ!" என்றது அந்த ராட்சஸத் தலை.

டோரதி மிகுந்த வருத்தத்தோடு வெளியே வந்தாள். வெளியே காத்திருந்த இரும்பு மனிதன், வைக்கோல் மனிதன், பயந்தாங்கொள்ளிச் சிங்கம் எல்லாரும் ஆஸ் என்ன சொன்னுர் என்பதைத் தெரிந்துகொள்வதற்காக அவளைச் சூழ்ந்துகொண்டனர்.

" இனி நான் ஊருக்குத் திரும்ப முடியாது. ஏனென்றுல் நான் மேற்குத் திசைக் கெட்ட தேவதையைக் கொன்றுலொழிய என்னைக் கான்ஸாஸுக்கு அனுப்பமுடியாது

என்று ஆஸ் மாயாவி கூறிவிட்டார். ஆனால், நான் எப்படி அந்தக் கொடிய தேவதையைக் கொல்வது?" என்று டோரதி வருத்தத்துடன் சொன்னாள்.

மறுநாள் காலை பச்சைத் தாடியுடைய வீரன் வைக்கோல் மனிதனிடம் வந்து, "என்னோடு வாருங்கள். இன்று ஆஸ் மாயாவி உங்களுக்குப் பேட்டி அளிப்பார்," என்றான்.

அவன் அச்சிப்பாயைப் பின் தொடர்ந்து சென்றான். அவன் மாயாவியின் அறைக்குள் செல்ல அனுமதிக்கப் பட்டான். உள்ளே பச்சை நிறச் சிம்மாசனத்தில் மிக அழகான பெண் ஒருத்தி உட்கார்ந்திருந்தாள். அவள் அவனை அன்போடு பார்த்து, "நானே மாபெரும் ஆஸ் மாயாவி. உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

டோரதி முந்தின நாள் பார்த்த தலையை எதிர்பார்த்து உள்ளே நுழைந்த வைக்கோல் மனிதன், இதைப் பார்த்துத் திகைப்படைந்தான்; இருந்தாலும் தைரியமாகப் பதில் சொன்னான்: "நான் ஒரு வைக்கோல் மனிதன். என் உடல் முழுதும் வைக்கோலால் ஆனது. அதனால் எனக்குத் தலையில் மூளையே இல்லை. நீங்கள் தயவு செய்து எனக்குக் கொஞ்சம் மூளை தர வேண்டும். இதை வேண்டிக்கொள்ளவே இங்கே வந்தேன்."

"நான் உனக்கு மூளை தந்தால் நீ எனக்கு என்ன தருவாய்?"

"அறிவும் ஆற்றலும் மிக்க உங்களுக்கு நான் என்ன தர இருக்கிறது? உங்களுக்கு ஒருவர் உதவியும் தேவையே இல்லையே!"

"எனக்கு உதவி செய்யாதவர்களுக்கு நான் எந்த உதவியும் செய்வதில்லை. நீ ஒன்று செய். மேற்குத் திசைக் கெட்ட தேவதையைக் கொன்றுவிடு. உனக்கு மிகச் சிறந்த மூளையைத் தந்து உதவுகிறேன். அதற்குப் பிறகு இந்த ஆஸ் நாட்டிலேயே நீதான் சிறந்த அறிவாளியாகத் திகழ்வாய்," என்றாள் அம்மாயப் பெண்.

"நீங்கள் டோரதிக்கும் இதே வேலையைத்தான் இட்டீர்கள் போலிருக்கிறதே !" என்று ஆச்சரியத்துடன் வைக்கோல் மனிதன் கேட்டான்.

"ஆமாம். டோரதியிடமும் இதையேதான் சொன்னேன். அந்த மேற்குத் திசைத் தேவதையை யார் கொன்றாலும் சரிதான். ஆனால், அவள் செத்தாலொழிய, உன் விருப்பத்தை நான் நிறைவேற்ற மாட்டேன். அதற்கு முன் வந்து என்னைத் தொந்தரவு செய்யாதே, போ !"

வைக்கோல் மனிதன் மிக்க மன வருத்தத்தோடு தன் நண்பர்களிடம் திரும்பி வந்து நடந்ததைச் சொன்னான். ஆஸ் மாயாவி வெறும் தலையல்ல, ஓர் அழகான பெண் என்பதைக் கேட்டதும் டோரதிக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

அதற்கு அடுத்த நாள் இரும்பு மனிதனுக்கு ஆஸ் மாயாவியிடமிருந்து அழைப்பு வந்தது. இரும்பு மனிதன் மாயாவியின் அறைக்குள் நுழைந்தான். ஆனால், அங்கே பெரிய தலையோ அழகான பெண்ணோ இல்லை. ஒரு பயங்கரமான விலங்கு உருவத்தில் ஆஸ் மாயாவி உட்கார்ந்திருந்தார். நல்ல வேளை இரும்பு மனிதனுக்கு இருதயமே இல்லை. இருந்திருந்தால் பயத்தால் அது எப்படி அடித்துக்கொண்டிருக்குமோ தெரியாது!

"நான்தான் எல்லாம் வல்ல ஆஸ் மாயாவி. உனக்கு என்ன வேண்டும்? எதற்காக இங்கே வந்திருக்கிறாய் ?" என்று பெரிய கர்ஜனையுடன் அவ்விலங்கு இரும்பு மனிதனைக் கேட்டது.

"நான் இரும்பினால் செய்யப்பட்டவன். எனக்கு இருதயமே இல்லை. அதனால் எவரிடத்திலும் இரக்கம் காட்ட முடியவில்லை. அதனால் மற்ற மனிதர்களுக்கு இருப்பது போல எனக்கும் ஓர் இருதயம் வேண்டும்."

"நான் இதை எதற்காகச் செய்ய வேண்டும் ?" என்று கேட்டது அவ்விலங்கு.

"எனது இந்த ஆசையை நீங்கள் ஒருவர்தான் நிறைவேற்ற முடியும்," என்று இரும்பு மனிதன் சொன்னான்.

இதைக் கேட்ட அந்த மிருகம் லேசாக உறுமிவிட்டு, உனக்கு இருதயம் வேண்டுமென்ருல், நீ அதற்காக உழைத்து அதைப் பெற வேண்டும்."

"எப்படி?" என்று கேட்டான் இரும்பு மனிதன்.

"மேற்குத் திசைக் கெட்ட தேவதையைக் கொல்வதில் டோரதிக்கு உதவி செய். அந்தத் தேவதை இறந்தபின் என்னிடம் வந்தால் உனக்கு நல்ல அன்பும் இரக்கமும் மிக்கதொரு பெரிய இருதயம் தருகிறேன்," என்றது அந்த மிருகம்.

வேறு வழியின்றி இரும்பு மனிதனும் வருத்தத்துடன் திரும்பி வந்து, தான் கண்ட பயங்கர மிருகத்தைப் பற்றித் தன் நண்பர்களிடம் விவரித்தான்.

அடுத்த நாள் பச்சை நிறத்தாடியுள்ள வீரன் பயந்தாங்கொள்ளிச் சிங்கத்தைக் கூட்டிக்கொண்டு போய் ஆஸ் மாயாவி பேட்டி காணும் அறையின் வாசலில் விட்டுச் சென்ருன்.

சிங்கம் கதவைத் திறந்து உள்ளே சென்றது; சுற்று முற்றும் பார்த்தது. அங்கே சிம்மாசனத்தின்மேல் ஒரு நெருப்புக் கோளம் கண்ணைக் கூசும் ஒளியுடன் எரிந்து கொண்டிருந்தது. சிங்கத்தால் அதை உற்றுப் பார்க்க முடியவில்லை.

அதிலிருந்து மெதுவாக, தாழ்ந்த குரல் ஒன்று வெளி வந்தது. "நான்தான் மாபெரும் பயங்கர ஆஸ் மாயாவி. நீ யார்? நீ எதற்காக என்னைத் தேடி வந்திருக்கிருய்?"

"நான் எதைக் கண்டாலும் பயப்படும் பயந்தாங் கொள்ளிச் சிங்கம். எனக்குத் தைரியம் வேண்டும். இதைத் தருமாறு உங்களைக் கேட்பதற்காகவே நான் வந்திருக்கிறேன். நீங்கள் எனக்குத் தைரியம் தந்தால், மக்கள் என்னை அழைப்பது போல நான் உண்மையில் விலங்கினத்தின் அரசனுக விளங்க முடியும்," என்றது சிங்கம்.

"நான் உனக்கு எதற்காகத் தைரியம் தர வேண்டும்?" என்று ஆஸ் கேட்டார்.

"ஏனென்றால், எல்லா மாயாவிகளையும்விட நீங்களே சிறந்தவர். எனது ஆசையை நிறைவேற்றும் சக்தி உங்களிடமே இருக்கிறது."

நெருப்புக் கோளம் திடீரென்று மேலும் பிரகாசமாக எரிந்தது. ஆஸ் மாயாவி, "மேற்குத் திசைக் கெட்ட தேவதை இறந்ததும் என்னிடம் வா. அப்பொழுது உனக்குத் தைரியம் தருகின்றேன். ஆனால் அதுவரை நீ பயந்தாங்கொள்ளியாக இருக்க வேண்டியதுதான்," என்றார்.

சிங்கம் வேறு வழியின்றி வாலைக் குழைத்துக் கொண்டு வேகமாக வெளியே வந்தது; வெளியே காத்திருந்த தன் நண்பர்களிடம் ஆஸ் மாயாவியுடன் நடந்த பேட்டியைப் பற்றிச் சொன்னது.

"இப்பொழுது நாம் என்ன செய்வது?" என்று டோரதி வருத்தத்தோடு கேட்டாள்.

"இப்போது நாம் செய்யக் கூடியது ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. அது என்னவென்றால், விங்கீக்கள் வாழும் நாட்டிற்குச் சென்று அங்கேயுள்ள மேல்திசைக் கெட்ட தேவதையைக் கண்டுபிடித்துக் கொன்றுவிட வேண்டும்," என்றது சிங்கம்.

"அவ்வாறுதான் செய்ய வேண்டும் போலிருக்கிறது. ஆனால், என் பெரியம்மாவைப் பார்ப்பதற்காகக்கூட நான் யாரையும் கொலை செய்ய விரும்பவில்லை," என்றாள் டோரதி.

கடைசியில் அவர்கள் மறுநாள் காலையில் கிளம்புவதெனத் தீர்மானித்துவிட்டுப் படுக்கச் சென்றனர்.

# 9

மறுநாள் விடியற்காலையில் பச்சை நிறத் தாடியுடைய வீரன் அவர்களை மரகத நகரின் தெருக்கள் வழியாக அழைத்துச் சென்ருன். அவர்கள் கோட்டை வாசலில் மூக்குக்கண்ணுடி வைத்திருந்த அறையை அடைந்ததும் காவல்காரன் அவர்களது கண்ணுடிகளின் பூட்டுகளைத் திறந்து அவற்றைக் கழற்றிப் பெட்டியில் அடுக்கி வைத்தபின், கோட்டைவாசலைத் திறந்து அவர்களை வெளியே செல்ல அனுமதித்தான்.

"மேற்குத் திசைக் கெட்ட தேவதை வாழும் இடத்திற்கு எப்படிச் செல்வது?" என்று கேட்டாள் டோரதி.

"அங்கே செல்வதற்கு வழி ஒன்றும் கிடையாது. இதுவரை எவரும் அங்கே போக வேண்டும் என்று விரும்பியதில்லை," என்று காவல்காரன் பதிலளித்தான்.

"அப்படியாளுல் மேற்குத் திசைக் கெட்ட தேவதையை எப்படிக் கண்டு பிடிப்பது?"

"சூரியன் மறைகின்ற திசையை நோக்கி நடந்து சென்ருல் நீங்கள் அந்தத் தேவதையைப் பார்க்கலாமே!" என்ருன் அவன்.

அவனிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு நமது நண்பர்கள் மேற்கு நோக்கி நடக்கலானுர்கள்; சீக்கிரமே மரகத நகரைவிட்டு வெகு தூரம் வந்துவிட்டார்கள்.

அந்தி வேளை நெருங்கியதும் டோரதி, தோத்தோ, சிங்கம் மூவரும் மிகவும் களைத்துப் போய்விட்டனர். அவர்கள் புல் தரையில் படுத்து உறங்க ஆரம்பித்தனர்.

இப்போது நாம் நம் நண்பர்களை இப்படியே விட்டுவிட்டு, மேற்குத் திசைக் கெட்ட தேவதை என்ன செய்கிருள் என்று பார்ப்போம்.

மேல்திசைத் தேவதைக்கு ஒரு கண்தான் உண்டு. ஆனால், அவள் அந்தக் கண்ணைக்கொண்டு எங்கே என்ன நடந்தாலும் பார்த்து விடுவாள். டோரதியும் நண்பர்களும் இளைப்பாறுவதைக் கண்டுவிட்டாள் அவள். உடனே தன் கழுத்தில் தொங்கிக்கொண்டிருந்த வெள்ளி ஊதலை எடுத்து ஊதினாள். வெள்ளி ஊதல் ஓசையைக் கேட்டு நாலா பக்கத்திலிருந்தும் ஒரு பெரும் ஓநாய்க் கூட்டம் வந்தது.

"உடனே ஓடிச் சென்று அந்த வழிப்போக்கர்களைக் கடித்துக் கண்டதுண்டமாக்கிவிட்டு வாருங்கள்!" என்று உத்தரவு பிறப்பித்தாள் மேல்திசைத் தேவதை.

"அவர்களை நீங்கள் அடிமைகளாக்கிக்கொள்ளப் போவதில்லையா?" என்று ஓநாயின் தலைவன் கேட்டது.

"இல்லை, இல்லை. அவர்களில் ஒருவன் இரும்பினால் செய்யப்பட்டவன்; மற்றவன் வெறும் வைக்கோலால் ஆனவன். மற்றவர்களில் ஒருத்தியோ சிறு பெண். இன்னொன்று ஒரு சிங்கம். இவர்கள் ஒருவரும் எந்த வேலைக்கும் உபயோகமற்றவர்கள். ஆகையால், இவர்களைக் கிழித்தெறிந்து விட்டு வாருங்கள்."

"சரி, இப்போதே போகிறோம்," என்றது ஓநாயின் தலைவன்.

உடனே எல்லா ஓநாய்களும் டோரதியையும் நண்பர்களையும் நோக்கி வேகமாய் ஓடின.

நல்ல வேளையாக வைக்கோல் மனிதனும் இரும்பு மனிதனும் தூங்காமல் விழித்துக்கொண்டிருந்தார்கள். தங்களை நோக்கி ஓநாய்கள் ஓடி வருவதை அவர்கள் பார்த்துவிட்டார்கள்.

"இவைகளோடு சண்டை போடுவது என் வேலை," என்று சொல்லிக்கொண்டே இரும்பு மனிதன் தன்னுடைய கோடாலியை எடுத்தான்; தன்மீது பாய்ந்த தலைமை ஓநாயின் கழுத்தை வெட்டித் தள்ளினான்; இவ்வாறே வந்த ஓநாய்கள் நாற்பதையும் தன் கோடாலிக்கு இரையாக்கினான். அவற்றின் உடல்கள் மலைபோல் குவிந்து

கிடந்தன. இரும்பு மனிதன் தன் கோடாலியைக் கீழே வைத்துவிட்டு, வைக்கோல் மனிதனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டான். அவர்கள் இருவரும் மறுநாள் காலை டோரதி எழுந்திருக்கும் வரை அப்படியே உட்கார்ந்திருந்தனர்.

மறுநாள் காலை அவர்கள் தங்கள் பிரயாணத்தை மேலும் தொடர்ந்தனர்.

அதே சமயத்தில் மேல்திசைக் கெட்ட தேவதை தன் கோட்டைவாசலில் நின்று, தன் ஒற்றைக் கண்ணுல் பார்த்தாள்; தன்னுடைய ஓநாய்க் கூட்டம் முழுவதும் இறந்து கிடப்பதைக் கண்டாள். டோரதியும், அவளது நண்பர்களும் தன் கோட்டையை நோக்கி வருவதைப் பார்த்ததும் தேவதைக்குக் கோபம் தாங்க முடியவில்லை. மீண்டும் தனது வெள்ளி ஊதலை எடுத்து இரண்டு தடவை ஊதினுள். அவள் ஊதிய உடனே அண்டங்காக்கைகளின் கூட்டம் ஒன்று அவளிடம் பறந்து வந்தது. அண்டங் காக்கைகளின் அரசனைப் பார்த்து, "உடனே பறந்து சென்று நம்மை நோக்கி வரும் அந்த அன்னியர்களின் கண்களைக் குத்தி அவர்களைக் கிழித்து எறியுங்கள்," என்று உத்தரவிட்டாள் மேல்திசைக் கொடிய தேவதை.

காக்கைக் கூட்டம் டோரதியையும், அவளது நண்பர்களையும் நோக்கிப் பறந்து வந்தது.

இதைப் பார்த்த வைக்கோல் மனிதன், "இது என்னுடைய சண்டை. நீங்கள் என் பக்கத்தில் படுத்துக்கொள்ளுங்கள். உங்களுக்கு ஒரு துன்பமும் வராதபடி நான் பார்த்துக்கொள்கிறேன்," என்றுன்.

அப்படியே வைக்கோல் மனிதன் பக்கத்தில் மற்றவர்கள் படுத்துக்கொண்டனர். வைக்கோல் மனிதன் மட்டும் தன் கைகளை அகல விரித்துக்கொண்டு நின்றுன். சோளக் கொல்லை பொம்மையைக் கண்டதும் எல்லாக் காக்கைகளும் பயந்து போய்விட்டன. காக்கை அரசன் மட்டும் பயப்படவில்லை. "இவன் வெறும் வைக்கோலால் செய்யப்பட்ட பொம்மை. இதோ இவன் கண்களைக்

கொத்துகிறேன் பாருங்கள்,'' என்று சொல்லிக்கொண்டே அவனை நோக்கிப் பறந்து வந்தது.

பறந்து வந்த காக்கை அரசனை வைக்கோல் மனிதன் தன் இரு கைகளால் கெட்டியாகப் பிடித்து, அதன் கழுத்தைத் திருகியெறிந்தான் ; அதன் பின், காக்கைக் கூட்டத்தில் இருந்த நாற்பது காக்கைகளையும் இப்படியே கொன்று தீர்த்தான். பிறகு டோரதியும், மற்றவர்களும் எழுந்து மறுபடி பிரயாணத்தைத் தொடர்ந்தார்கள்.

தான் அனுப்பிய காக்கைக் கூட்டம் இறந்து கிடப்பதைக் கண்ட மேல்திசைக் கெட்ட தேவதைக்குப் பிரமாதமான கோபம் வந்துவிட்டது. வெள்ளி ஊதலை மறுபடியும் எடுத்து மூன்று தடவை ஊதினாள். உடனே ஒரு கருவண்டுக் கூட்டம் 'ஙொய்' என்று ரீங்காரம் செய்து கொண்டு பறந்து வந்தது.

"அதோ அங்கே வரும் அந்நியர்களிடம் போய், உங்கள் விஷக் கொடுக்குகளால் அவர்களை நன்றாகக் கொட்டிக் கொன்று விடுங்கள்," என்று தேவதை கட்டளையிட்டாள். அவ்வாறே கருவண்டுக் கூட்டம் டோரதியை நோக்கிப் பறந்து வந்தது.

வண்டுகள் வருவதை இரும்பு மனிதன் பார்த்தான். வைக்கோல் மனிதன் இவ்வண்டுகளிடமிருந்து தப்ப ஒரு வழியைச் சொன்னான்: "என் உடலிலுள்ள வைக்கோலை எடுத்து டோரதி, தோத்தோ, சிங்கம் இவர்கள்மேலே போட்டு மூடிவிடு. வண்டுகள் அவர்களைக் கொட்ட முடியாது,'' என்றான் அவன்.

வண்டுகள் வந்தன. அங்கே இரும்பு மனிதனைத் தவிர வேறு எவரையும் காணாததால் அவை யாவும் அவனைக் கொட்டின. அவனுக்குத் துளிக்கூட வலிக்கவில்லை ; வண்டுகளின் கொடுக்குகள்தான் உடைந்து போயின. கொடுக்குகள் இல்லாமல் வண்டுகள் வாழ முடியாதாகையால், அந்த வண்டுகள் யாவும் இறந்து வீழ்ந்தன. கருவண்டுகளின் கதை இப்படி முடிந்தது.

பிறகு, டோரதியும் தோத்தோவும் சிங்கமும் எழுந்த னர். டோரதியும் இரும்பு மனிதனும் சேர்ந்து வைக்கோல் மனிதனின் உடம்புக்குள் மறுபடி வைக்கோலைத் திணித்த னர். பிறகு எல்லாரும் முன்போல் பிரயாணத்தைத் தொடங்கினார்கள்.

தனது விஷ வண்டுகள் யாவும் உயிரற்றுக் கிடப்ப தைக் கண்டதும் மேல்திசைக் கெட்ட தேவதைக்கு வந்த ஆத்திரத்துக்கு அளவேயில்லை. அவள் தனது அடிமை களான விங்கீக்களைக் கூப்பிட்டாள்; அவர்களிடம் ஆளுக்கோர் ஈட்டியைக் கொடுத்து, டோரதியையும் மற்றவர்களையும் கொன்று வருமாறு உத்தரவு போட்டு அனுப்பினாள்.

விங்கீக்கள் பொதுவாகவே தைரியமற்றவர்கள். அவர்கள் கெட்ட தேவதைக்குப் பயந்து, வேறு வழியின் றிச் சண்டைக்குக் கிளம்பினார்கள். அவர்கள் டோரதிக்குப் பக்கத்தில் வந்ததும் சிங்கம் பிரமாதமாகக் கர்ஜித்துக் கொண்டே அவர்களை நோக்கிப் பாய்ந்தது. அவ்வளவு தான்! எல்லா விங்கீக்களும் நடுநடுங்கிப்போய், தலை தெறிக்க ஓடிவிட்டார்கள்.

அவர்கள் பயந்து போய்த் திரும்பி வந்துவிட்டதைக் கண்ட கெட்ட தேவதைக்குக் கோபம் கொந்தளித்துக் கொண்டு வந்தது. விங்கீக்களைச் சாட்டையால் அடித்து, அவரவர் வேலைக்கு அனுப்பிவிட்டு, மேற்கொண்டு என்ன செய்வது என்று யோசித்தாள். டோரதியும், அவளது நண் பர்களும் தன்னுடைய சக்தியையெல்லாம் தாண்டித் தன் திட்டங்கள் எல்லாவற்றையும் எப்படித் தகர்த்தெறிகிறார் கள் என்று கெட்ட தேவதைக்குப் புரியவே இல்லை. இருந்தாலும், அவள் சக்தி மிகுந்த கெட்ட தேவதையான தால், அடுத்தபடி என்ன செய்வதென்று தீர்மானித்து விட்டாள்.

அவள் வீட்டின் அலமாரியில் தங்கத்தால் ஆன மந்திரக் குல்லாய் ஒன்று இருந்தது. அந்தக் குல்லாயை யார் போட்டுக்கொள்கிறார்களோ அவர்கள் இடும்

மூன்று கட்டளைகளைப் பறக்கும் குரங்குகள் நிறைவேற்றும். ஆனால் ஒருவரே மூன்று முறைகளுக்குமேல் அந்த அதிசயக் குரங்குகளுக்குக் கட்டளை இட முடியாது. மேற்குத் திசைத் தேவதை அந்தக் குல்லாயை ஏற்கெனவே இரண்டு தடவை உபயோகித்திருக்கிறாள். இன்னும் ஒரே ஒரு முறைதான் அவள் அதை உபயோகப்படுத்தலாம்.

மேல்திசைத் தேவதை அந்த மந்திரக் குல்லாயை எடுத்துத் தன் தலையில் அணிந்துகொண்டாள்; பிறகு இடது காலில் நின்றவாறே, "எப்-பே, பெப்-பே, கக்-கே!" என்று மெதுவாகச் சொன்னாள்.

பிறகு வலது காலில் நின்றுகொண்டு, "ஹில்–லோ, ஹொல்-லோ, ஹெல்-லோ!" என்று கூவினாள்.

இதன் பிறகு இரண்டு கால்களிலும் நின்றுகொண்டு, "ஸிஸ்-ஸீ, ஸுஸ்–ஸீ, ஸிக்!" என்று உரக்கக் கத்தினாள்.

மந்திரம் வேலை செய்ய ஆரம்பித்தது. திடீரென்று வானம் இருண்டது; படபடவென்று இறகுகள் அடித்துக் கொள்ளும் சத்தமும் சிரிப்பும் கொம்மாளமும் கேட்டன. இருண்ட வானத்தில் சூரியன் மறுபடி தோன்றினான். சூரிய ஒளியில் கெட்ட தேவதையைச் சுற்றிப் பல குரங்குகள் சூழ்ந்து நின்றன. ஒவ்வொரு குரங்குக்கும் இரண்டு பலமுள்ள பெரிய இறக்கைகள் இருந்தன.

அந்தக் குரங்குகளுள் ஒன்று மற்றவற்றைவிடப் பெரியதாக இருந்தது. அதுதான் குரங்குகளின் தலைவன். அது மேல்திசைத் தேவதையிடம், "நீ எங்களை மூன்றாம் முறையாக—கடைசித் தடவையாக—கூப்பிட்டிருக்கிறாய். உனக்கு என்ன வேண்டும்?" என்றது.

"நேராகச் சென்று, என் ராஜ்யத்திற்குள் நுழைந்திருக்கும் அந்நியர்களை அழித்துவிடுங்கள். அந்தச் சிங்கத்தைமட்டும் கொல்லாமல் என்னிடம் கொண்டு வாருங்கள். நான் அதற்குச் சேணமிட்டுக் குதிரை போல வாகனமாக உபயோகித்துக்கொள்ளப் போகிறேன்!" என்றாள் கெட்ட தேவதை.

"உன் கட்டளைகளை இப்போதே நிறைவேற்றுகிறோம்," என்று சொல்லிற்று, குரங்குத்தலைவன். எல்லாக் குரங்குகளும் பலத்த இரைச்சலுடன் நம் நண்பர்களை நோக்கிப் பறந்து வந்தன.

குரங்குகளில் சில, இரும்பு மனிதனைத் தூக்கிச் சென்று, பாறைகள் நிறைந்த ஓர் இடத்தில் கீழே போட்டன. கீழே விழுந்த இரும்பு மனிதனின் உடல் நசுங்கி விட்டது. அவன் அசையவும் முனகவுங்கூட முடியாமல் கிடந்தான்.

மற்றும் சில குரங்குகள் வைக்கோல் மனிதனைப் பிடித்து, அவன் உடலில் இருந்த வைக்கோல் எல்லாவற்றையும் பிய்த்துத் தூக்கி எறிந்தன ; அவனது கால் அணி, தொப்பி முதலிய எல்லாவற்றையும் சேர்த்து மூட்டையாகக் கட்டி ஒரு பெரிய மரத்தின் உச்சாணிக் கிளையில் தொங்கவிட்டன.

மிஞ்சிய குரங்குகள் கயிற்றைக்கொண்டு சிங்கத்தின் கைகளையும் கால்களையும் கட்டிவிட்டன ; சிங்கம் திமிர முடியாதபடி அதைக் கட்டியதும் அதைத் தூக்கிக் கொண்டு பறந்து போய், கெட்ட தேவதையின் கோட்டையில் ஒரு கொட்டிலில் விட்டன. சிங்கம் தப்பி ஓட முடியாதபடி கொட்டிலில் நாலு பக்கமும் பெரிய இரும்பு வேலி இருந்தது.

ஆனால் டோரதியை, அவை ஒன்றும் செய்ய முடியவில்லை. குரங்குகள் தலைவன் பயங்கரமாக இளித்துக் கொண்டு கைகளை நீட்டி டோரதியைப் பிடிக்க வந்தது ; ஆனால், டோரதியின் நெற்றியில் இருந்த முத்தத்தின் அடையாளத்தைப் பார்த்ததும் அப்படியே நின்றுவிட்டது; டோரதியைத் தீண்ட வேண்டாம் என்று மற்றக் குரங்குகளுக்கு எச்சரித்தது.

"இச்சிறு பெண்ணுக்கு நாம் எவ்விதத் தீங்கும் இழைக்கக் கூடாது. ஏனென்றால், பலம் பொருந்திய நல்ல சக்திகள் இவளிடம் குடிகொண்டிருப்பதால், கெட்ட சக்திகள் இவளை அணுக முடியாது. ஆதலால்,

இவளைத் தூக்கிக்கொண்டு கெட்ட தேவதையின் கோட்டையில் விடுவதுதான் நம்மால் முடியும்," என்று கூறிக்கொண்டு, குரங்குகளின் தலைவன் டோரதியைத் தூக்கிப் பறந்து சென்றது.

கெட்ட தேவதையிடம் குரங்குத் தலைவன் சொல்லிற்று: "எங்களால் முடிந்த அளவு உன் கட்டளைகளை நிறைவேற்றிவிட்டோம். இரும்பு மனிதனும், வைக்கோல் மனிதனும் அழிந்தனர். சிங்கம் உன் கோட்டைக் கொட்டிலில் கட்டப்பட்டிருக்கிறது. இந்தச் சின்னப் பெண்ணையோ அவள் கையில் உள்ள நாய்க்குட்டியையோ நாங்கள் ஒன்றும் செய்ய முடியாது. மூன்றாவது முறையாக உன் கட்டளையை நிறைவேற்றிவிட்டதால், எங்கள் கூட்டத்தின்மீது உனக்கு இருந்த சக்தி தீர்ந்துவிட்டது. இனி எங்களை நீ பார்க்க முடியாது." பின்பு தலைவனும் மற்றக் குரங்குகளும் வானில் பறந்து மறைந்தன.

டோரதியின் நெற்றியிலிருந்த முத்தச் சின்னத்தைப் பார்த்ததும் மேல்திசைத் தேவதை வியந்து கவலைப்பட ஆரம்பித்தாள். நெற்றியில் அந்த அடையாளம் இருப்பதால் பறக்கும் குரங்குகளோ தானோ டோரதியை ஒன்றும் செய்ய முடியாது. டோரதியின் காலில் இருந்த வெள்ளிப் பாதரட்சைமீது அவள் பார்வை சென்றது. உடனே அவளுடைய பயம் அதிகரித்தது. அந்தப் பாதரட்சைகளுடைய சக்தி அவளுக்குத் தெரியும்; பயத்தால் அவ்விடத்தை விட்டு ஓடிவிட எண்ணினாள். ஆனால், அவள் டோரதியின் முகத்தைப் பார்த்ததும் அவள் ஓர் அப்பாவிப் பெண் என்று தெரிந்துகொண்டு விட்டாள். டோரதிக்கே தன்னிடம் உள்ள பெரிய சக்தியைப் பற்றி ஏதும் தெரியாது என்பதைத் தேவதை புரிந்துகொண்டாள். அவள் தனக்குள் சிரித்துக்கொண்டே, "இவளுக்கோ தன்னிடம் உள்ள மந்திர சக்தி இன்னதென்று தெரியாது. ஆகையால் இவளை ஏமாற்றி என் அடிமையாக்கிக்கொள்ள வேண்டும்!" என்று திட்டமிட்டாள். கெட்ட தேவதை டோரதியைப் பார்த்து, "என்னோடு வா.

"உன் கட்டளைகளை இப்போதே நிறைவேற்றுகிறேம்," என்று சொல்லிற்று, குரங்குத்தலைவன். எல்லாக் குரங்குகளும் பலத்த இரைச்சலுடன் நம் நண்பர்களை நோக்கிப் பறந்து வந்தன.

குரங்குகளில் சில, இரும்பு மனிதனைத் தூக்கிச் சென்று, பாறைகள் நிறைந்த ஓர் இடத்தில் கீழே போட்டன. கீழே விழுந்த இரும்பு மனிதனின் உடல் நசுங்கி விட்டது. அவன் அசையவும் முனகவுங்கூட முடியாமல் கிடந்தான்.

மற்றும் சில குரங்குகள் வைக்கோல் மனிதனைப் பிடித்து, அவன் உடலில் இருந்த வைக்கோல் எல்லாவற்றையும் பிய்த்துத் தூக்கி எறிந்தன ; அவனது கால் அணி, தொப்பி முதலிய எல்லாவற்றையும் சேர்த்து மூட்டையாகக் கட்டி ஒரு பெரிய மரத்தின் உச்சாணிக் கிளையில் தொங்கவிட்டன.

மிஞ்சிய குரங்குகள் கயிற்றைக்கொண்டு சிங்கத்தின் கைகளையும் கால்களையும் கட்டிவிட்டன ; சிங்கம் திமிர முடியாதபடி அதைக் கட்டியதும் அதைத் தூக்கிக் கொண்டு பறந்து போய், கெட்ட தேவதையின் கோட்டையில் ஒரு கொட்டிலில் விட்டன. சிங்கம் தப்பி ஓட முடியாதபடி கொட்டிலில் நாலு பக்கமும் பெரிய இரும்பு வேலி இருந்தது.

ஆனல் டோரதியை, அவை ஒன்றும் செய்ய முடியவில்லை. குரங்குகள் தலைவன் பயங்கரமாக இளித்துக் கொண்டு கைகளை நீட்டி டோரதியைப் பிடிக்க வந்தது ; ஆனல், டோரதியின் நெற்றியில் இருந்த முத்தத்தின் அடையாளத்தைப் பார்த்ததும் அப்படியே நின்றுவிட்டது; டோரதியைத் தீண்ட வேண்டாம் என்று மற்றக் குரங்குகளுக்கு எச்சரித்தது.

"இச்சிறு பெண்ணுக்கு நாம் எவ்விதத் தீங்கும் இழைக்கக் கூடாது. ஏனென்ருல், பலம் பொருந்திய நல்ல சக்திகள் இவளிடம் குடிகொண்டிருப்பதால், கெட்ட சக்திகள் இவளை அணுக முடியாது. ஆதலால்,

இவளைத் தூக்கிக்கொண்டு கெட்ட தேவதையின் கோட்டையில் விடுவதுதான் நம்மால் முடியும்," என்று கூறிக் கொண்டு, குரங்குகளின் தலைவன் டோரதியைத் தூக்கிப் பறந்து சென்றது.

கெட்ட தேவதையிடம் குரங்குத் தலைவன் சொல்லிற்று: "எங்களால் முடிந்த அளவு உன் கட்டளைகளை நிறைவேற்றிவிட்டோம். இரும்பு மனிதனும், வைக்கோல் மனிதனும் அழிந்தனர். சிங்கம் உன் கோட்டைக் கொட்டிலில் கட்டப்பட்டிருக்கிறது. இந்தச் சின்னப் பெண்ணையோ அவள் கையில் உள்ள நாய்க்குட்டியையோ நாங்கள் ஒன்றும் செய்ய முடியாது. மூன்றாவது முறையாக உன் கட்டளையை நிறைவேற்றிவிட்டதால், எங்கள் கூட்டத்தின்மீது உனக்கு இருந்த சக்தி தீர்ந்துவிட்டது. இனி எங்களை நீ பார்க்க முடியாது." பின்பு தலைவனும் மற்றக் குரங்குகளும் வானில் பறந்து மறைந்தன.

டோரதியின் நெற்றியிலிருந்த முத்தச் சின்னத்தைப் பார்த்ததும் மேல்திசைத் தேவதை வியந்து கவலைப்பட ஆரம்பித்தாள். நெற்றியில் அந்த அடையாளம் இருப்பதால் பறக்கும் குரங்குகளோ தானோ டோரதியை ஒன்றும் செய்ய முடியாது. டோரதியின் காலில் இருந்த வெள்ளிப் பாதரட்சைமீது அவள் பார்வை சென்றது. உடனே அவளுடைய பயம் அதிகரித்தது. அந்தப் பாதரட்சைகளுடைய சக்தி அவளுக்குத் தெரியும்; பயத்தால் அவ்விடத்தை விட்டு ஓடிவிட எண்ணினாள். ஆனால், அவள் டோரதியின் முகத்தைப் பார்த்ததும் அவள் ஓர் அப்பாவிப் பெண் என்று தெரிந்துகொண்டு விட்டாள். டோரதிக்கே தன்னிடம் உள்ள பெரிய சக்தியைப் பற்றி ஏதும் தெரியாது என்பதைத் தேவதை புரிந்துகொண்டாள். அவள் தனக்குள் சிரித்துக்கொண்டே, "இவளுக்கோ தன்னிடம் உள்ள மந்திர சக்தி இன்னதென்று தெரியாது. ஆகையால் இவளை ஏமாற்றி என் அடிமையாக்கிக்கொள்ள வேண்டும்!" என்று திட்டமிட்டாள். கெட்ட தேவதை டோரதியைப் பார்த்து, "என்னோடு வா.

நான் சொல்வதையெல்லாம் நீ செய்ய வேண்டும். இல்லா விட்டால் — அவ்வளவுதான் — உன்னைக்கொன்று விடு வேன் !'' என்று பயங்கரமாகச் சொன்னாள்.

டோரதியும் பயத்தோடு அவள் பின்னே போனாள். சமையல் அறையை அவர்கள் அடைந்தனர். "நல்ல வேளை, தேவதை என்னைக் கொல்லவில்லை ! சமையல றையில் என்ன கடுமையான வேலையானாலும் செய்தால் போகிறது! '' என்று டோரதி தீர்மானித்தாள்.

டோரதியைச் சமயலறையில் வேலை செய்ய விட்டு விட்டு, கெட்ட தேவதை, சிங்கம் இருக்கும் கொட்டிலை நோக்கி நடந்தாள் ; சிங்கத்துக்குச் சேணம் பூட்டித் தன் ரதத்தை இழுக்கச் செய்து, அதில் சவாரி செய்தால் எவ் வளவு வேடிக்கையாயிருக்குமென்று எண்ணியவாறு கொட்டிலின் இரும்புக் கதவைத் திறந்தாள். அவள் கதவைத் திறந்ததுதான் தாமதம்; சிங்கம் பலமாகக் கர்ஜித் துக்கொண்டே அவள்மீது பாய்ந்தது. அவள் அடித்துப் புடைத்துக்கொண்டு தலைதெறிக்க வெளியே ஓடிக் கதவை மூடினாள்.

கதவை மூடிவிட்டு, கம்பிகள் வழியே தேவதை சிங்கத் திடம், "உனக்குச் சேணம் பூட்டி ஓட்ட முடியாவிட் டால் என்ன ? உன்னைப் பட்டினி போட முடியும் என்னால். என் சொற்படி நீ நடக்கும்வரை உனக்குக் கொஞ்சங் கூட உணவு கிடைக்காது !'' என்றாள்.

அன்றிலிருந்து தேவதை சிங்கத்துக்குச் சாப்பாடு அனுப்புவதற்குப் பதிலாகத் தினமும் பகலில் வந்து, கம்பி களுக்கு வெளியே நின்றுகொண்டு, "என்ன, குதிரை யைப்போல் சேணத்தை மாட்டிக்கொள்ள ஒப்புக்கொள் கிறாயா ?'' என்று கேட்டு வந்தாள்.

சிங்கம் உறுமிக்கொண்டே, "முடியாது ! முடியவே முடியாது ! நீ மட்டும் கம்பிகளைத் தாண்டி உள்ளே வா. உன்னைக் கடித்து விடுகிறேன் !'' என்று கர்ஜித்து வந்தது.

சிங்கம் அவ்வளவு தைரியமாகத் தேவதைக்குப் பதில ளித்து வந்ததன் காரணம் இதுதான் : ஒவ்வொரு நாளும்

கெட்ட தேவதை தூங்கும்போது டோரதி சமையல் அறையிலிருந்து சாப்பாடு எடுத்து வந்து சிங்கத்துக்கு வேண்டிய அளவு கொடுத்துக்கொண்டிருந்தாள். அப்போதெல்லாம் அவர்கள் இருவரும் கெட்ட தேவதையை ஏமாற்றி விட்டுத் தப்பி ஓடிப் போவது எப்படி என்று யோசனை செய்து வந்தனர். ஆனால், அவர்களுக்கு ஒரு வழியும் தெரியவில்லை. கோட்டையைச் சுற்றி மஞ்சள் நிற விங்கீக்கள் காவல் காத்து வந்தனர். அவர்களுக்குத் தேவதையைக் கண்டால் மிகுந்த பயமாகையால், அவளது உத்தரவுக்கு விரோதமாய் நிச்சயம் டோரதியையும் சிங்கத்தையும் தப்பி ஓட விடமாட்டார்கள். என்ன செய்வதென்று இருவருக்கும் புரியவில்லை.

இப்படியிருக்கையில், டோரதியின் வெள்ளிப் பாதரட்சைகளை எப்படியாவது தான் அடைய வேண்டும் என்ற ஆசை கெட்ட தேவதைக்குப் பிறந்தது. காரணம் இதுதான் : தேவதையின் சக்தி வாய்ந்த ஓனாய்கள், காக்கைகள், வண்டுகள் யாவும் இறந்து விட்டன. மந்திரக் குல்லாயின் சக்தியை மூன்று முறை உபயோகித்தாகி விட்டது. டோரதியிடமுள்ள வெள்ளிப் பாதரட்சைகளுக்கு அதிக சக்தி இருந்தது. அவை மட்டும் கிடைக்குமானால், தனக்கு முன்பு இருந்ததைவிட அதிக சக்தி வந்துவிடும். ஆகையால், அவ்வெள்ளிப் பாதரட்சைகளை டோரதி எப்பொழுது கழற்றி வைப்பாள் என்று பார்த்துக் கொண்டேயிருந்தாள் தேவதை. டோரதிக்கோ வெள்ளிப் பாதரட்சைகளிடம் மிகுந்த ஆசை. குளிக்கும் போதும் இரவில் படுக்கப் போகும் போதுந்தான் பாதரட்சைகளைக் கழட்டுவாள். ஆனால், தேவதைக்கு இருளைக் கண்டால் பயம். அதனால் இரவில் தேவதை டோரதியின் அறைக்குப் போய்ப் பாதரட்சையை எடுத்து வர முயலவில்லை. தண்ணீரைக் கண்டாலோ, தேவதைக்கு இன்னும் அதிக நடுக்கம். கெட்ட தேவதை ஒருபோதும் தண்ணீரைத் தொட மாட்டாள்; தண்ணீர் தன்மேல் பட்டுவிடாதபடியும் மிக எச்சரிக்கையாக இருப்பாள்;

ஆகையால், டோரதி குளிக்கும்போது அவள் பக்கத்தில் கூடப் போகத் துணியவில்லை.

கெட்ட தேவதை மிகவும் யோசனை செய்து ஒரு தந்திரம் செய்தாள்; சமயலறையின் நடை பாதையில் ஒரு கனமான இரும்புக் கம்பியை வைத்தாள்; தன் மந்திர சக்தியால் கம்பி பிறர் கண்ணுக்குத் தெரியாதபடி மறையச் செய்தாள். சிறிது நேரம் கழித்து அங்கே வந்த டோரதி அந்த இரும்புக் கம்பி இடறிக் கீழே விழுந்தாள். விழுந்த வேகத்தில் பாதரட்சைகளில் ஒன்று மட்டும் கழன்று விழுந்தது. டோரதி அதை எடுப்பதற்குள் கெட்ட தேவதை தாவிப் போய் அதை எடுத்துக்கொண்டு, தன் எலும்பும் தோலுமான காலில் அணிந்துகொண்டு விட்டாள்.

தன் வெள்ளிப் பாதரட்சைகளில் ஒன்றைத் தேவதை எடுத்துக்கொண்டதும் டோரதிக்குக் கோபம் கோபமாக வந்தது. "என்னுடைய பாதரட்சையைத் திருப்பிக் கொடு!" என்று கோபத்துடன் கேட்டாள்.

"முடியாது," என்று தேவதை ஏளனமாகச் சொன்னாள்.

"என்னுடைய பாதரட்சைகளை எடுத்துக்கொள்ள உனக்கு உரிமை இல்லை."

"நான் இதைத் தரமாட்டேன்; நான் எப்படியாவது இன்னொரு பாதரட்சையையும் எடுத்துக்கொள்வேன்!" என்றாள் தேவதை.

டோரதிக்குக் கோபம் தாங்கவில்லை; பக்கத்தில் வாளியிலிருந்த தண்ணீரை எடுத்து, தேவதைமீது வீசிக் கொட்டினாள். கெட்ட தேவதையின் தலையிலிருந்து கால் வரை தண்ணீர் மயமாகிவிட்டது. அவள் பயத்தால் உரத்த குரலில் 'கிரீச்' என்று கத்தினாள். உடனடியாக டோரதியின் கண் முன்னே அவளது உடல் சுருங்கி விழத் தொடங்கியது.

"என்ன வேலை செய்தாய், பார்! இன்னும் ஒரு நிமிஷத்தில் நான் கரைந்து போய்விடுவேன். தண்ணீர்

என் உயிருக்கு உலை வைக்குமென்பது உனக்குத் தெரியாதா ?" என்று புலம்பிக்கொண்டே கேட்டாள். "ஐயோ, இதோ அழிந்து போகிறேனே!'' என்று சொல்லிக்கொண்டே கெட்ட தேவதை உருவின்றிக் கரைந்து போனாள்.

அவள் இருந்த இடத்தில் ஒருவித பழுப்பு நிறத் திரவந்தான் தேங்கிக் கிடந்தது. அதன் நடுவே வெள்ளிப் பாதரட்சை இருந்தது. டோரதி அதை எடுத்து ஒரு துணியால் துடைத்தாள்; பிறகு அதைத் தன் காலில் போட்டுக்கொண்டு, தாங்கள் விடுதலை அடைந்த நற்செய்தியைச் சிங்கத்திடம் சொல்வதற்காக ஓடினாள்.

# 10

---

கெட்ட தேவதை கரைந்து மறைந்தசெய்தியைக் கேட்டதும் பயந்தாங்கொள்ளிச் சிங்கம் மகிழ்ச்சி அடைந்தது. டோரதி கதவைத் திறந்து அதை விடுதலை செய்தாள். முதல் வேலையாக டோரதி எல்லா விங்கீக்களையும் கூப்பிட்டு, அவர்கள் இனி எவருக்கும் அடிமையில்லை என்பதை அறிவித்தாள்.

"நமது நண்பர்கள் இரும்பு மனிதனும் வைக்கோல் மனிதனும் மட்டும் நம்மோடு இச்சமயம் இருந்தால் எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்!" என்றது சிங்கம்.

"ஏன், நாம் அவர்களைக் காப்பாற்ற முடியாதா?" என்று டோரதி கவலையோடு கேட்டாள்.

"நாம் முயற்சி செய்து பார்க்கலாம்," என்றது சிங்கம்.

மறுபடியும் எல்லா விங்கீக்களையும் டோரதி கூப்பிட்டாள்; தன் நண்பர்களை மீட்பதற்கு அவர்கள் உதவி

செய்ய முடியுமா என்று விசாரித்தாள். அவர்களும் தங்களால் முடிந்த அளவு உதவி செய்வதாய்ச் சொன்னார்கள். அவர்களில் சிலரைத் தேர்ந்தெடுத்து இரும்பு மனிதனைத் தேடும்படி டோரதி அனுப்பினாள். அவர்கள் பாறைகள் மிகுந்த இடத்துக்குப் போய் அங்கே நசுங்கிக் கிடந்த இரும்பு மனிதனை ஜாக்கிரதையாகத் தூக்கிக் கொண்டு கோட்டைக்குத் திரும்பி வந்தனர்.

"உங்கள் ஊரில் கருமான்கள் உண்டா?" என்று டோரதி கேட்டாள்.

"ஓ, பெரிய இரும்புப் பட்டறைகள் வைத்துள்ள கருமான்கள் இருக்கிறார்களே!" என்று விங்கீக்கள் சொன்னார்கள்.

"கூட்டிக்கொண்டு வாருங்கள் அவர்களை," என்றாள் டோரதி. அவர்களும் வந்தார்கள்.

"இந்த இரும்பு மனிதனுடைய உடலில் நசுங்கிப் போன பாகங்களைச் சீர்படுத்தி, உடைந்த பாகங்களைப் பற்ற வைத்துப் பழையபடி அவன் உருவத்தை நேர் செய்ய முடியுமா?" என்று டோரதி கேட்டாள்.

அவர்களும் அவ்வாறு செய்வதாகச் சொல்லி வேலை செய்ய ஆரம்பித்தனர். அவர்கள் மூன்று நாட்கள் வேலை செய்த பின் இரும்பு மனிதன் முன்போல ஆகிவிட்டான். அவனால் கையையும் காலையும் நன்றாக அசைக்க முடிந்தது.

டோரதி இரும்பு மனிதனிடம் நடந்ததை எல்லாம் சொன்னாள். அவள் அதைச் சொல்லி முடிந்ததும், "அடடா! வைக்கோல் மனிதன்மட்டும் நம்மிடையே இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என்றான் அவன்.

"ஆமாம்! அவனைத் தேடுவோம்," என்று டோரதி கூறினாள். விங்கீக்களையும் கூட்டிக்கொண்டு வைக்கோல் மனிதனைத் தேடுவதில் முனைந்தனர். ஒரு நாள் முழுவதும் தேடிய பின் அவர்கள் உயரமான மரங்கள் இருக்கும் பிரதேசத்தை அடைந்தார்கள். அங்கே ஓர் உயரமான மரத்தின் உச்சாணிக் கிளையில் வைக்கோல் மனிதனின்

ஆடைகள் இருந்தன. அது மிக உயரமான மரம். தவிர, அதன்மேல் ஏற முடியாமல் வழுக்கியது. என்ன செய்வ தென்று யாருக்கும் புரியவில்லை.

மற்றவர்கள் திகைத்துக்கொண்டிருந்த போது இரும்பு மனிதன் தன்னுடைய கோடாலியால் மரத்தை வெட்டித் தள்ளினான். பலத்த ஓசையுடன் கீழே விழுந் தது மரம். மரத்திலிருந்து கீழே விழுந்த வைக்கோல் மனிதனின் ஆடைகளை எடுத்தாள் டோரதி; விங்கீக்களை வைக்கோல் கொண்டு வரச்சொல்லி உடைகளுக்குள் அதைத் திணித்தாள். ஆ! விரைவில் வைக்கோல் மனிதன் பழைய உருவமெடுத்து நின்றான்!

சில நாட்கள் டோரதியும் நண்பர்களும் மஞ்சள் நிறக் கோட்டையில் சந்தோஷமாக இருந்தார்கள். ஒரு நாள் திடீரென்று டோரதிக்குத் தன் பெரியம்மாவைப் பற்றிய நினைவு வந்தது. "நாம் ஆஸ் மாயாவியினிடம் போய் அவர் வாக்களித்தபடி செய்யக் கோர வேண்டும்," என்று மற்றவர்களிடம் சொன்னாள்.

மறுநாள் டோரதி எல்லா விங்கீக்களையும் கூப்பிட்டு அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டாள்; பிறகு, தன் கூடையில் உணவுப் பண்டங்களை எடுத்து வைத்துக் கொள்வதற்காகச் சமையல் அறைக்குச் சென்று அலமாரி யைத் திறந்தாள். அங்கே தங்கக் குல்லாய் இருந்தது. குல்லாயின் சக்தியைப் பற்றி டோரதிக்குத் தெரியாது. அதைத் தன் தலையில் அணிந்து பார்த்தாள். அக்குல்லாய் அவளுக்காகவே செய்ததைப் போலிருந்தது. ஆகவே, தன் சொந்தக் குல்லாயைத் தன் கூடையில் மடித்து வைத்துவிட்டுத் தங்கக் குல்லாயைப் போட்டுக்கொண் டாள்.

மறுநாள் காலை அவர்கள் எல்லாரும் மரகத நகரத் திற்குப் புறப்பட்டனர்.

# 11

மேல்திசைக் கெட்ட தேவதையின் கோட்டையிலிருந்து மரகத நகரத்துக்குச் சரியான வழி கிடையாது என்பது நமக்குத் தெரியும். அவற்றிற்கிடையே ஒற்றையடிப் பாதைகூடக் கிடையாது. டோரதியும் அவள் நண்பர்களும் தன் கோட்டையை நோக்கி வெகு தூரத்தில் வரும் போதே அவர்களைப் பார்த்த கெட்ட தேவதை பறக்கும் குரங்குகளைக் கொண்டு அவர்களைக் கோட்டைக்குக் கொண்டுவரச் செய்தாள் அல்லவா? இப்போது அவர்கள் மரகத நகருக்குக் கால்நடையாகத் திரும்பிப் போவது கஷ்டமாக இருந்தது. சூரியன் உதிக்கும் திசையை நோக்கி நடக்க வேண்டுமென்று அவர்களுக்குத் தெரியும். ஆகவே, சூரியனைப் பார்த்தவண்ணம் நோக்கிச் சென்றனர். ஆனால் நடுப்பகலில் சூரியன் தலைக்கு நேர் மேலாக இருந்தபோது எது கிழக்கு எது மேற்கு என்று தெரியவில்லை. ஒரு பெரிய வயல் காட்டில் புகுந்து வழி தெரியாமல் திணற வேண்டியதாயிற்று. வழி தவறி விடவே எங்கெங்கோ அலைந்து திரிந்தனர். இதற்குள் இரவும் வந்து விட்டது. அதனால் மேலே பிரயாணம் செய்ய முடியாமல் வெட்ட வெளியில் படுத்துத் தூங்கினார்கள்; மறுநாள் காலை புறப்பட்டுச் சூரியன் உதித்த திக்கைப் பார்த்தவண்ணம் நடக்க ஆரம்பித்தார்கள்.

"நாம் வேகமாக நடந்தால் நிச்சயம் ஏதாவது ஓர் இடத்துக்குப் போய்ச் சேருவோம்," என்றாள் டோரதி.

ஆனால் பல நாட்கள் நடந்தும் நாற்புறமும் வயலைத் தவிர வேறொன்றையும் காணவில்லை.

"அடடா! நாம் எப்படியோ வழி தவறிவிட்டோம்!" என்று கவலைப்பட்டான் வைக்கோல் மனிதன்.

"நாம் வயல் எலிகளை உதவிக்குக் கூப்பிட்டால் என்ன ?" என்றாள் டோரதி.

இவ்வாறு சொல்லிவிட்டு, அவள் தன் கழுத்தில் தொங்கிக்கொண்டிருந்த – எலி ராணி கொடுத்த–ஊதலை எடுத்து ஊதினாள். சில நிமிஷங்களில் ஏராளமான சாம்பல் நிற எலிகள் சத்தம் போட்டுக்கொண்டு டோரதியை நோக்கி ஓடி வந்தன. அவற்றில் எலி ராணியும் இருந்தது. அது டோரதியைப் பார்த்துத் தன் கீச்சுக் குரலில், "நண்பர்களே, வணக்கம். நான் என்ன செய்ய வேண்டும் ?" என்று கேட்டது.

"எங்களுக்கு வழி தவறிவிட்டது. மரகத நகரம் எங்கிருக்கிறது என்று உன்னால் சொல்ல முடியுமா ?" என்று கேட்டாள் டோரதி.

"நிச்சயமாக. ஆனால், அது வெகு தூரம் தள்ளி அல்லவா இருக்கிறது ! நீங்கள் இதுவரை அதற்கு எதிர்த் திசையில் நடந்து வந்திருக்கிறீர்களே !" இவ்வாறு சொல்லிக்கொண்டே எலி ராணி டோரதியின் தலையில் இருந்த தங்கக் குல்லாயைப் பார்த்துவிட்டு, டோரதியிடம், "நீ ஏன் அந்தக் குல்லாயின் மந்திர சக்தியை உபயோகித்து, பறக்கும் குரங்குகளைக் கூப்பிடக் கூடாது ? அவை உன்னை ஒரு மணி நேரத்துக்குள் மரகத நகருக்குக் கொண்டு போய்விடுமே !" என்றது.

"அதற்கு மந்திர சக்தி இருக்கிறது என்று எனக்கு இத்தனை நேரம் தெரியவே தெரியாதே. அது என்ன சக்தி ?" என்று டோரதி ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"அதைப் பற்றிய விவரமெல்லாம் தங்கக் குல்லாயின் உள்புறத்திலேயே எழுதியிருக்கும். ஆனால், நீ பறக்கும் குரங்குகளைக் கூப்பிடுவதானால் நாங்கள் ஓடி ஒளிய வேண்டும். ஏனென்றால், எங்களைத் தொந்தரவு செய்வதில் அந்த விஷமக்காரக் குரங்குகளுக்கு மிக்க ஆனந்தம் !" என்று எலி ராணி சொல்லிற்று.

"அவை என்னை ஒன்றும் செய்யாதா ?" என்று டோரதி கவலையோடு கேட்டாள்.

"சேச்சே! இந்தக் குல்லாயைப் போட்டுக்கொண்டிருப்பவர்களின் உத்தரவுப்படி அந்தக் குரங்குகள் நடக்கும்; உன்னை ஒன்றும் செய்யமுடியாது. நான் போய் வருகிறேன்," என்று கூறி எலி ராணி மறைந்தது. அத்துடன் வந்த எலிப்படைகளும் போனவழி தெரியாமல் மறைந்தன.

டோரதி குல்லாயின் உள்ளே பார்த்தாள். உட்புறத்தில் ஏதோ எழுதியிருந்தது. அதுதான் மந்திரமாக இருக்க வேண்டும் என்று டோரதி நினைத்தாள். மந்திரம் சரியாகப் பலிப்பதற்கு என்ன செய்யவேண்டும் என்று சொல்லப் பட்டிருந்ததை டோரதி கவனமாகப் படித்தாள்; பிறகு குல்லாயைத் தன் தலையில் போட்டுக்கொண்டாள்.

"எப்–பே, பெப்–பே, கக்–கே!" என்று தன் இடது காலில் நின்றவாறு மெதுவாகச் சொன்னாள்.

"ஹில்–லோ, ஹொல்–லோ, ஹெல்–லோ!" என்று வலது காலில் நின்றுகொண்டு சொன்னாள்.

பிறகு இரண்டு காலிலும் நின்று, "ஸிஸ்–ஸீ, ஸுஸ்-ஸீ, ஸிக்!" என்று சொல்லி முடித்தாள்.

மந்திரத்தைச் சொல்லி முடித்ததும் இறக்கைகள் அடித்துக்கொள்ளும் சத்தமும் பெரிய ஆரவாரமும் கேட்டன. பறக்கும் குரங்குக் கூட்டம் இவர்கள் நின்ற இடத்தை நோக்கி வந்துகொண்டிருந்தது. அதன் தலைவன் டோரதியின் எதிரில் வந்து வணங்கி, அவளது கட்டளை என்ன என்று கேட்டது.

"நாங்கள் மரகத நகரம் போக வேண்டும். வழி தவறிவிட்டது," என்றாள் டோரதி.

"நாங்கள் உங்களை இதோ தூக்கிச் செல்கிறோம்!" என்று குரங்குத் தலைவன் சொல்லிற்று. உடனே தலைவனும் இன்னொரு பெருங்குரங்கும் சேர்ந்து டோரதியைச் சுமந்துகொண்டு பறந்தன. மற்றக் குரங்குகள் வைக்கோல் மனிதனையும், இரும்பு மனிதனையும், சிங்கத்தையும் தனித்தனியே சுமந்துகொண்டு பறந்தன. ஒரு குட்டிக் குரங்கு தோத்தோவைத் தூக்கிக்கொண்டு பறந்தது.

டோரதிக்கு இந்த வான்வெளிப் பயணம் வெகு சுகமாக இருந்தது. ஆனால், திடீரென்று அவளுக்கு ஒரு சந்தேகம் தோன்றிற்று. "நீங்கள் ஏன் தங்கக் குல்லாயின் மந்திர சக்திக்குக் கட்டுப்பட வேண்டியிருக்கிறது?" என்று கேட்டாள்.

"அது ஒரு பெரிய கதை," என்று குரங்குத் தலைவன் ஆரம்பித்தது:

"முன்னொரு காலத்தில் நாங்கள் எல்லாரும் சுதந்தரமாக இருந்தோம்; எங்களுக்கு இஷ்டமானபடி யார் ஏவலுக்கும் கட்டுப்படாமல் இருந்தோம். இது ஆஸ் மாயாவி வானிலிருந்து இறங்கி வந்து மரகத நகரை ஆளுவதற்குப் பல ஆண்டுகளுக்குமுன் இருந்த நிலை.

"அப்பொழுது வடக்குத் திசையில் ஓர் அழகான இளவரசி இருந்தாள். அவள் மாய மந்திரத்தில் கைதேர்ந்தவள். அவள் தன் மந்திர சக்தியைக்கொண்டு எல்லா மக்களுக்கும் உதவி செய்துகொண்டிருந்தாள். தீங்கு செய்வதென்பதே அவளுக்குத் தெரியாது. அவள் பெயர் கேலெட்டி. எல்லாரும் அவளை மணக்க விரும்பினர். ஆனால், அவள் மனதிற்கு உகந்தவனாக ஒருவரும் கிடைக்கவில்லை. கடைசியில் ஓர் அழகிய சிறுவனைக் கண்டாள்; அவனிடம் அழகு மட்டுமன்றித தைரியமும், வயதுக்கு மீறிய அறிவும் ஒருங்கே கூடியிருப்பதைக் கண்டாள். அவன் பெரியவன் ஆனதும் அவனையே மணம் செய்துகொள்வதெனத் தீர்மானித்து, கேலெட்டி அவனைத் தன் மாணிக்க அரண்மனைக்கு அழைத்துச் சென்றாள். தன் மந்திர சக்தியால் அவனை மிகவும் பலசாலியாகவும் மேலும் அழகானவனாகவும் செய்து வளர்த்தாள். கொலேலாவுக்கு—அதுதான் அவன் பெயர்—வயது வந்ததும், இந்த மாயா ஜால உலகத்திலேயே மிக்க அறிவு படைத்தவனாக விளங்கினான். கேலெட்டி அவனை உயிருக்குயிராக நேசித்தாள்; தங்கள் திருமணத்துக்கு ஏற்பாடுகளை வேகமாய்ச் செய்ய ஆரம்பித்தாள்.

"கேலெட்டியின் அரண்மனைக்குப் பக்கத்தில் ஒரு தோப்பு இருந்தது. அதில்தான் எங்கள் கூட்டம் வசித்து வந்தது. அப்போது என் தாத்தா கூட்டத் தலைவராக இருந்தார். வேடிக்கை விஷமம் செய்வதென்றால் அவர் சாப்பாட்டைக்கூட மறந்து விடுவார். அவர் ஒரு நாள் தனியாகப் பறந்துகொண்டிருந்த போது நதிக்கரையோரமாக கொலேலா நடந்துகொண்டிருப்பதைப் பார்த்தார். அவன் ரோஜா நிறப் பட்டாலும், பழுப்பு நிற வெல்வெட்டாலும் ஆன ஆடையை அணிந்துகொண்டிருந்தான். அவனைப் பார்த்ததும் என் தாத்தாவுக்கு ஏதாவது தமாஷ் செய்யும் எண்ணம் எழுந்தது. அவர் உத்தரவின்பேரில் சில குரங்குகள் பறந்து சென்று, கொலேலாவைத் தூக்கிச் சென்று நதியின் நடு மையத்தில் நீரில் போட்டன.

"'அடடா! உன் புதுத் துணியில் நீர்க்கறை ஏதேனும் ஆகிவிட்டதா பார்!' என்று என் தாத்தா கேலியாகக் கத்தினார். கொலேலா நீந்திக் கரைக்கு வந்து சேர்ந்தான். கேலெட்டி ஓடிவந்து பார்த்தபோது கொலேலாவின் உயர்ந்த பட்டு—வெல்வெட் ஆடை—நனைந்து வீணாகி விட்டதைக் கண்டாள்.

"இந்த விஷமம் செய்தது யார் என்று இளவரசிக்குத் தெரிந்ததும் அவளுக்குப் பொல்லாத கோபம் வந்து விட்டது. உடனே எல்லாப் பறக்கும் குரங்குகளையும் தன் முன் வரவழைத்தாள்; அவற்றின் இறக்கைகளைக் கட்டி நதிக்குள் போட்டுவிட வேண்டும் என்று கட்டளையிட்டாள். என் தாத்தா கேலெட்டியிடம் மிகவும் கெஞ்சினார். இறக்கைகளைக் கட்டி விட்டால் குரங்குகள் நீரில் அடித்துக்கொண்டு போகப்பட்டு இறந்து விடும் என்று அவருக்குத் தெரியும். கொலேலாவும் இரக்கப்பட்டு அவருக்குப் பரிந்து பேசினான். கடைசியில் கேலெட்டி ஒரு நிபந்தனையின்பேரில் அவர்களுக்கு 'உயிர்ப்பிச்சை அளித்தாள். பறக்கும் குரங்குகள் அப்பொழுது முதற்கொண்டு தங்கக் குல்லாயின் சொந்தக்காரர் எவராயிருந்தாலும் சரி,

அவரது மூன்று கட்டளைகளை நிறைவேற்ற வேண்டும் என்பதே அந்த நிபந்தனை. இப்படியாக அன்றுமுதல் நாங்கள் தங்கக் குல்லாயின் சொந்தக்காரரது மூன்று கட்டளைகளை நிறைவேற்றி வருகிறோம்."

டோரதி, "அப்புறம் கோலேலா—கேலட்டியின் கதை எப்படியாயிற்று ?" என்று கேட்டாள்.

"தங்கக்குல்லாயின் முதல் சொந்தக்காரன் கொலேலா தான். ஆகையால், அவனிடமிருந்துதான் முதல் கட்டளை பிறந்தது. கேலெட்டிக்கு எங்களைக் கண்டாலே பிடிக்காமல் போய்விட்டதாகையால், அவர்களுக்கு மணம் ஆனதும், நாங்கள் இளவரசியின் கண்ணில் படாதபடி தொலைதூரத்தில் போய் வசிக்கும்படி கோலேலா உத்தரவு போட்டான். இதன் பிறகு அவன் கட்டளை ஏதும் பிறப்பிக்கவே இல்லை. தங்கக்குல்லாய் கெட்ட தேவதையிடம் சிக்கும்வரை இப்படியேதான் நாங்கள் எவ்விதத் தொந்தரவுமின்றி வசித்து வந்தோம். ஆனால் கெட்டதேவதை கையில் குல்லாய் சிக்கினதும் அவள் எங்கள் உதவிகொண்டு விங்கீக்களை அடிமைப்படுத்தினாள் ; பிறகு மேற்குத் திசையிலிருந்து ஆஸ் மாயாவியையும் விரட்டினாள். இப்பொழுது இந்தக் குல்லாய் உன்னுடையது. நீ மூன்று முறை எங்களுக்குக் கட்டளையிடலாம்."

குரங்குத் தலைவன் இவ்வாறு கதையைச் சொல்லி முடிக்கும் சமயம் கீழே மரகத நகரின் பளபளப்பான பச்சை நிறச் சுவர்கள் தெரியலாயின. குரங்குக் கூட்டம் கோட்டை வாயிலில் அவர்களை இறக்கிவிட்டு வேகமாய்ப் பறந்து சென்றது.

# 12

டோரதியும் மற்றவர்களும் மரகத நகரின் கோட்டைக் கதவை அடைந்து அங்கிருந்த மணியை அடித்தார்கள். முன்பு அவர்கள் சந்தித்த அதே கோட்டைக் காவலாளி கதவைத் திறந்தான்.

“என்ன, திரும்பி வந்து விட்டீர்களா? நீங்கள் மேற்குத் திசை கெட்ட தேவதையைப் பார்க்கப் போயிருப்பதாக அல்லவா நினைத்தேன்!” என்று அவன் வியப்போடு கேட்டான்.

“அவள் உருகிக் குலைந்து விட்டாளே!” என்று வைக்கோல் மனிதன் விளக்கமாகச் சொன்னான்.

“உருகி விட்டாளா! இது எவ்வளவு நல்ல சேதி தெரியுமா? யார் அவளை உருகச் செய்தது?” என்று காவல்காரன் கேட்டான்.

“டோரதிதான்,” என்று சிங்கம் கம்பீரமாகச் சொல்லிற்று.

“அப்படியா!” என்று ஆச்சரியத்துடன் சொல்லி விட்டுக் காவல்காரன் டோரதிமுன் தாழ்ந்து வணங்கினான். பிறகு அவர்களை அவன் சிறிய அறைக்குள் அழைத்துச் சென்றான்; பெரிய பெட்டியிலிருந்து பச்சைக் கண்ணாடிகளை எடுத்து முன்போலவே அவர்கள் கண்களில் மாட்டிப் பூட்டினான். பிறகு அவர்கள் எல்லோரும் கதவைத் திறந்துகொண்டு மரகத நகரின் தெருக்கள் வழியே சென்றனர். டோரதியும் நண்பர்களும் கெட்ட தேவதையைக் கொன்ற செய்தியை நகர மக்கள் கோட்டைக் காவலாளியிடமிருந்து அறிந்ததும் அவர்களைச் சூழ்ந்து கொண்டனர். இவ்வாறு ஊர்மக்கள் திரண்டு தங்களைத் தொடர டோரதியும் நண்பர்களும் ஆஸ் மாயாவியின் அரண்மனையை அடைந்தனர்.

அரண்மனை வாயிற்காப்போன் உடனே உள்ளே சென்று இந்த நல்ல செய்தியை ஆஸ் மாயாவியிடம் தெரிவித்தான். ஆனால் மாயாவி பதில் ஏதும் சொல்ல வில்லை. அவர்களை உடனே அழைத்து வருமாறு சொல்லு வார் என்று எல்லோரும் எதிர்பார்த்தனர். ஆனால் அப்படி ஏதும் நடக்கவில்லை. மறுநாளோ, அதற்கு அடுத்த நாளோ, அதற்கும் அடுத்த நாளோகூட அவரிடமிருந்து ஒரு வார்த்தைகூடப் பதில் இல்லை. இப்படிப் பதிலுக்காக நாள் கணக்கில் காத்துக்கொண்டிருந்தது, நம் நண்பர் களுக்கு அலுப்பாக இருந்தது. மிகுந்த கஷ்டங்களுக்கு உள்ளாகித் திரும்பி வந்த தங்களை ஆஸ் மாயாவி இப்படி மோசமான முறையில் நடத்துவதைக் கண்டதும் அவர் களுக்கு அவர்மேல் எரிச்சல் எழுந்தது.

வைக்கோல் மனிதன் தாதிப்பெண்ணைக் கூப்பிட்டு மாயாவிக்கு ஒரு செய்தி அனுப்பினான்; "மாயாவி எங்களை உடனடியாக உள்ளே கூப்பிட்டுப் பார்க்கா விட்டால், நாங்கள் பறக்கும் குரங்குகளைக் கூப்பிட்டு அவர் தம் வாக்குப்படி நடக்கும்படி செய்துவிடுவோம்!" என்று சொல்லி அனுப்பினான்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் ஆஸ் மாயாவி பயந்து போய், மறுநாள் தம்மைப் பார்க்கக் கொலு அறைக்கு வரும்படி அவர்களுக்குச் செய்தி அனுப்பினார்.

மறுநாள் காலை சரியாக ஒன்பது மணிக்குப் பச்சை நிறத் தாடியுடைய காவல்காரன் அவர்களிடம் வந்தான்; நான்கு நிமிஷங்கள் கழித்து அவர்களை ஆஸ் மாயாவி பேட்டி அளிக்கும் அறைக்குள் அழைத்துச் சென்றான்.

இந்தச் சமயம் அறையில் ஒரு குரல் எங்கோ கூரைக்குப் பக்கத்திலிருந்து வருவது போலக் கேட்டது.

"நான்தான் எல்லாம் வல்ல ஆஸ் மாயாவி! நீங்கள் என்னை எதற்காகப் பார்க்க வேண்டும்?" என்று அந்தக் குரல் கம்பீரமாகக் கேட்டது.

அவர்கள் நாலா பக்கமும் பார்த்தார்கள். யாரையும் காணவில்லை.

"நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் ?" என்று டோரதி கேட்டாள்.

"நான் எங்கும் இருக்கின்றேன் ; சாதாரண மனிதர்களின் கண்களுக்குப் புலப்பட மாட்டேன். இப்போது நான் சிம்மாசனத்தில் உட்கார்ந்துகொள்கிறேன். நீங்கள் என்னேடு பேசலாம்," என்று குரல் பதில் சொல்லிற்று.

"உங்கள் வாக்கை நிறைவேற்றுமாறு கேட்க வந்திருக்கிறேம் !" என்றுள் டோரதி.

"என்ன வாக்கு ?" என்று ஆஸ் கேட்டார்.

"கெட்ட தேவதையைக் கொன்றதும் என்னைக் கான்ஸாஸுக்குத் திருப்பி அனுப்புவதாக வாக்களித்தீர்கள் !" என்றுள்.

"எனக்கு மூளை தருவதாகச் சொல்லியிருந்தீர்கள் !" என்றுன் வைக்கோல் மனிதன்.

"எனக்கு இருதயம் தருவதாகச் சொல்லியிருந்தீர்கள் !" என்றுன் இரும்பு மனிதன்.

"எனக்குத் தைரியம் தருவதாகச் சொல்லி இருந்தீர்கள் !" என்றது பயந்தாங்கொள்ளிச் சிங்கம்.

"உண்மையாகவே கெட்ட தேவதை அழிந்துவிட்டாளா ?" என்று அந்தக் குரல் கேட்டது. டோரதிக்கு அப்போது அந்தக் குரலில் சற்று நடுக்கமிருப்பது போலத் தோன்றியது.

"ஆமாம். அவளை நான் ஒரு வாளித் தண்ணீரைக் கொண்டு கரைத்துவிட்டேன்," என்றுள் டோரதி.

"அப்படியா ! அவ்வளவு விரைவிலா ! நல்லது, நாளை என்னிடம் வாருங்கள். நான் யோசிப்பதற்கு அவகாசம் வேண்டும்," என்றது அக்குரல்.

"ஏற்கெனவே உங்களுக்கு நிறைய அவகாசம் கொடுத்தாகி விட்டது !" என்று கோபமாய்ச் சொன்னன் இரும்பு மனிதன்.

"நாங்கள் மேலும் ஒருநாள்கூடக் காத்திருக்க மாட்டோம் !" என்றுன் வைக்கோல் மனிதன்.

" நீங்கள் உங்கள் வாக்குறுதிகளைக் காப்பாற்ற வேண்டும் ! " என்றாள் டோரதி.

சிங்கம் ஆஸ் மாயாவியைப் பயமுறுத்த எண்ணி, அறையே அதிரும்படி, பலமாக ஒரு தடவை கர்ஜித்தது. அதைக் கேட்டு தோத்தோ நடுங்கிப்போய்ச் சிங்கத்தின் பக்கத்திலிருந்து தாவி ஒரு மூலையில் போய்க் குதித்தது. அது குதித்த வேகத்தில் அங்கே இருந்த ஒரு பலகைத் தடுப்பு பலத்த ஓசையுடன் கீழே விழுந்தது. அது விழுந்ததும் எல்லாரும் அப்பக்கம் பார்த்தனர். அங்கே அவர்கள் கண்ட காட்சி !

திரைக்குப் பின்னால் ஒடுங்கிப்போன ஒரு கிழவன் நின்றுகொண்டிருந்தான் : வழுக்கைத் தலை ; சுருக்கம் விழுந்த முகம் ! அவனைக் கண்டதும் நம் நண்பர்கள் ஆச்சரியத்தில் ஆழ்ந்தது போலவே அவனும் அவர்களைக் கண்டு ஆச்சரியப்பட்டு நின்றான்.

இரும்பு மனிதன் தன் கோடாலியுடன் அந்தக் கிழவனிடம் போய், " நீ யார் ? " என்று அதட்டிக் கேட்டான்.

" நான்தான் எல்லாம் வல்ல, பயங்கரமான ஆஸ் மாயாவி...ஆனால் என்னைக் கொன்று விடாதே ; தயவு செய்து கொல்லாதே ! நீங்கள் சொல்வதையெல்லாம் செய்கிறேன் !" என்று கிழவன் நடுங்கிக்கொண்டே கூறினான்.

நம் நண்பர்கள் ஆச்சரியத்தோடும் ஏமாற்றத்தோடும் அவனைப் பார்த்தார்கள்.

" ஆஸ் மாயாவி ஒரு பெரிய தலை என்றல்லவா நான் நினைத்தேன் ! " என்றாள் டோரதி.

" ஆஸ் ஓர் அழகான பெண் என்று அல்லவா நினைத்தேன் ! " என்றான் வைக்கோல் மனிதன்.

" ஆஸ் மாயாவி ஒரு பயங்கர மிருகம் என்று அல்லவா நான் நினைத்தேன் ! " என்று இரும்பு மனிதன் சொன்னான்.

" ஆஸ் மாயாவி பெரிய நெருப்புக் கோளம் என்று அல்லவோ நான் நினைத்தேன் ! " என்று சிங்கம் சொல்லிற்று.

“ நீங்கள் எல்லாருமே நினைத்தது தவறு. உங்களை யெல்லாம் தப்பாக நம்பும்படி செய்து ஏமாற்றி வந்தேன் !” என்றான் கிழவன்.

“ எல்லாம் பொய்யா ? நீ மாயாவியே இல்லையா ? ” என்று கோபத்தோடு கேட்டாள் டோரதி.

“ இல்லை, குழந்தாய்! நான் ஒரு சாதாரண மனிதன்,” என்றான் அக்கிழவன்.

“ சாதாரண மனிதனாவது ? அதுகூட இல்லை நீ! நீ சுத்த பித்தலாட்டக்காரன் !” என்றான் வைக்கோல் மனிதன்.

இதைக் கேட்டுச் சந்தோஷமடைந்தவன் போலக் கிழவன் தன் கைகளை ஒன்றோடொன்று தேய்த்துக் கொண்டே, “ சரியாய்ச் சொன்னாய். ஆமாம், நான் பித்தலாட்டக்காரன்தான் !” என்றான்.

“ இது ரொம்ப மோசமல்லவா ! எனக்கு எப்படி இருதயம் கிடைக்கும் ?” என்றான் இரும்பு மனிதன்.

“ எனக்குத் தைரியம் எப்படிக் கிடைக்கும் ?” என்றது சிங்கம்.

“ எனக்கு மூளை கிடைப்பது எப்படி ? ” என்றான் வைக்கோல் மனிதன்.

“ நீ வெறும் பித்தலாட்டக்காரன் என்பது வேறு யாருக்கும் தெரியாதா ?” என்று கேட்டாள் டோரதி.

“ என்னைத் தவிர உங்கள் நான்கு பேருக்குமே இது தெரியும். நான் எல்லாரையும் வெகு காலமாய் ஏமாற்றி வந்து விட்டதால் என் இரகசியத்தை யாரும் கண்டு பிடிக்கமாட்டார்கள் என்று நினைத்தேன். உங்களை இந்த அறைக்குள் விட்டதே தவறு. சாதாரணமாய் நான் என் பிரஜைகள் யாரையுமே பார்ப்பதில்லை. ஆகையால், அவர்கள் நான் மிகவும் பயங்கரமான ஏதோ ஒன்று என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள் ! ” என்றான் ஆஸ்.

“ எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நான் முன்பு வந்த போது பெரிய தலை போல அல்லவா நீ என்னுடன் பேசினாய்! அது எப்படி ? ” என்று டோரதி கேட்டாள்.

“ அது என் தந்திரங்களில் ஒன்று. இப்படி வா, எல்லாவற்றையும் காட்டுகிறேன்,” என்று அக்கிழவன் டோரதியை அழைத்தான்.

சிம்மாசன அறைக்குப் பின்னால் இருந்த ஒரு சிறு அறைக்குள் டோரதியையும் மற்றவர்களையும் அவன் அழைத்துச் சென்றான். அங்கே மூலையில் கிடந்தது ஒரு பெரிய தலை. வெறும் காகிதத்தால் செய்த தலை அது! அதன் முகம் பார்ப்பதற்கு உயிருள்ள முகத்தைப் போலவே இருந்தது.

“ கூரையிலிருந்து ஒரு கம்பி மூலம் இந்தத் தலையைத் தொங்க விட்டேன். நான் மரப்பலகைத் தடுப்புக்குப் பின்னால் இருந்துகொண்டு சூத்திரக் கயிறுகளின் உதவியால் கண்களை உருளச் செய்தேன் ; வாயை அசையச் செய்தேன்,” என்றான் ஆஸ்.

“ குரல் தலையிலிருந்து வந்தது எப்படி ?” என்று கேட்டாள் டோரதி.

“ அது சுலபம். குரல் ஜாலக்காரன் நான். நான் பல குரலிலும், வெவ்வேறு திக்கிலிருந்து பேசுவது போலவும் பேசக் கற்றிருக்கிறேன். ஆகையால், நான் இங்கிருந்து பேசுகையில் என் குரல் அந்தத் தலையிலிருந்து எழும்புவது போலிருந்தது ! அவ்வளவுதான். உங்களை ஏமாற்ற நான் உபயோகித்த மற்றப் பொருள்களும் இங்கே இருக்கின்றன, பாருங்கள் !” என்று மூலையில் கிடந்த மற்றப் பொருள்களையும் அவன் காட்டினான்.

“ உண்மையில் இவ்வளவு மோசமான பித்தலாட்டக்காரனாக இருப்பது உனக்கு வெட்கமாகயில்லை !” என்றான் வைக்கோல் மனிதன்.

“ அப்படித்தான் இருக்கிறது. என்ன செய்வது ? கொஞ்சம் உட்கார்ந்து என் கதையைக் கேளுங்கள், சொல்கிறேன்,” என்று அக்கிழவன் தன் கதையைத் தொடங்கினான் :

“ நான் பிறந்தது அமெரிக்காவில் ஓமஹா நகரத்தில்; பெரியவன் ஆனதும் குரலினால் விசித்திரங்கள் செய்

யும் 'குரல் ஜாலக்காரன்' ஆனேன். எந்தப் பட்சி அல்லது மிருகத்தின் குரல் போலவும் நான் கூவிக் காட்டுவேன். கொஞ்சநாளில் எனக்கு அந்தத் தொழிலில் அலுப்புத்தட்டி விட்டது. ஊருக்கு ஊர் சர்க்கஸ் வந்ததும் ஆகாயத்தில் ஒரு பெரிய பலூனைப் பறக்க விட்டு, 'எல்லாரும் சர்க்கஸைப் பாருங்கள்' என்று விளம்பரம் செய்வது வழக்கமில்லையா? அவ்விதம் சர்க்கஸ் கம்பெனி ஒன்றில் பலூனில் பறக்கும் வேலையில் அமர்ந்தேன். ஒரு நாள் பலூனில் நான் மேலே போனபோது பலூனைக் கீழே கட்டியிருந்த கயிறு அறுந்து விட்டது. பலூன் மேல் நோக்கிப் பறந்தது. நானும் அத்துடன் தூக்கிச் செல்லப் பட்டேன்! ஒரு பகலும் ஓர் இரவும் அம்மாதிரிப் பறந்திருப் பேன். இரண்டாவது நாள் காலையில் நான் கண்ணை விழித்துப் பார்த்தபோது ஓர் அழகான புதிய நாட்டின் மேலே பலூனும் நானும் மிதப்பது தெரிந்தது.

"பலூன் மெதுவாகக் கீழே இறங்கத் தொடங்கியது. பலூனிலிருந்து ஆகாய மார்க்கமாக வருவதைக் கண்ட அந்நாட்டு மக்கள் கூட்டமாகக் கூடி விட்டனர். நான் மேக மண்டலத்திலிருந்து வந்ததால் நான்பெரிய மாயாவி என்று அவர்கள் நினைத்து விட்டார்கள். அவர்கள் அப்படியே நினைக்கட்டும் என்று நானும் விட்டு வைத்தேன். ஏனென்றால், என்னை மாயாவி என்று நினைத்து அந்நாட்டவர் என்னைக் கண்டு நடுநடுங்கி, நான் இட்ட கட்டளை எதுவானாலும் செய்யத் தயாராக இருந்தார்கள்.

"வேடிக்கைக்காகவும், இந்த அப்பாவி ஜனங்களுக்கு வேலை கொடுப்பதற்காகவும் ஒரு பெரிய நகரத்தையும், அதன் நடுவே ஓர் அரண்மனையையும் கட்டும்படி உத்தரவு போட்டேன். அந்த நாடு பசுமையாக இருந்ததால், என் நகரத்துக்கு மரகத நகரம் என்று பெயர் வைக்கத் தீர் மானித்தேன். இந்தப் பெயர் இன்னும் பொருத்தமாக இருக்க வேண்டும் என்பதற்காக எல்லாரும் எப்பொழுதும் பச்சைக் கண்ணாடிகள் அணிய வேண்டும் என்று உத்தர

விட்டேன். அதனால் அவர்கள் பார்த்தவை எல்லாம் பச்சையாகத் தென்பட்டன !"

"அப்படியானால் இங்கே இருப்பவை எல்லாம் பச்சை நிறம் இல்லையா !" என்று கேட்டாள் டோரதி.

"நம்முடைய ஊர்களில் உள்ளதைவிட இங்கே ஒன்றும் அதிகமாகப் பசுமை நிறத்தில் இல்லை. ஆனால், பச்சைக் கண்ணாடி போட்டுக்கொண்டு பார்த்தால் எல்லாம் பச்சையாகத்தானே தெரியும் ! அது கிடக்கட்டும். நான் இந்த ஜனங்களுக்கு எவ்வளவோ நல்லது செய்திருக்கிறேன். அவர்களும் என்னிடம் அன்புடன் இருக்கிறார்கள். ஆனால், நான் மட்டும் இந்த அரண்மனை கட்டின நாள் முதல் இதற்குள்ளேயே பொழுதைப் போக்குகிறேன் ; யாரையும் பார்ப்பது கிடையாது.

"பொதுவாக, எல்லாரும் என்னை எல்லாம் வல்லவன் என்று நினைத்தாலும், எனக்கு இந்தத் தேவதைகளிடம் வெகுவாகப் பயந்தான். எனக்கோ மாயா சக்தி ஏதும் கிடையாது. ஆனால், தேவதைகளுக்கோ அந்தச் சக்தி இருந்தது ; அதனால் ஆச்சரியமான பல காரியங்களைச் செய்தார்கள். அவர்களில் நாலுபேர் இருந்தார்கள் : வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய நாலு திசைகளிலும் இருந்த மக்களை அவர்கள் ஆண்டு வந்தார்கள். நல்ல வேளையாக வடதிசை, தென்திசைத் தேவதைகள் நல்லவர்கள்; அவர்களால் எனக்குக் கெடுதல் ஏற்படாதென்று தெரியும். ஆனால், கீழ்த்திசைத் தேவதையும் மேல்திசைத் தேவதையும் மிகவும் கெட்டவர்கள். நான் ஏதோ அவர்களைவிட மிகவும் சக்தி வாய்ந்தவன் என்று அவர்கள் நினைத்துக்கொண்டிருந்ததனால் நான் தப்பிப் பிழைத்திருக்கிறேன். எப்போது அவர்களால் என்ன தீமை நடக்குமோ என்று தினமும் பயந்துகொண்டே பல வருஷங்கள் கழித்தேன். ஆகையால், உன் வீடு விழுந்து கீழ்த்திசைக் கெட்ட தேவதை இறந்த செய்தி கேட்டதும் எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருந்தது தெரியுமா ! என்னிடம் உதவிக்காக நீ வந்தபோது, மிஞ்சியிருந்த

மேல்திசைக் கெட்ட தேவதையையும் ஒழித்து விட்டால் உனக்கு என்ன வேண்டுமானாலும் செய்யலாமென்று தோன்றிற்று. நீங்கள் கேட்ட எல்லாவற்றிற்கும் சரி சரி என்றேன். நீ அவளைக் கொன்றுவிட்டு வந்துவிட்டாய். இப்போது என் வாக்குகளைக் காப்பாற்ற முடியாமலிருக்கிறதே என்று வருத்தமாயிருக்கிறது!"

"அப்படியென்றால், எனக்கு மூளை தர முடியாதா?" என்று கேட்டான் வைக்கோல் மனிதன்.

"உனக்கு எதற்கு மூளை? நீதான் தினமும் புதிதாய் ஏதாவது கற்றுக்கொண்டு வருகிறாயே! பிறந்த குழந்தைக்குக்கூட மூளை இருக்கிறது; ஆனால், அதற்கு என்ன தெரியும்? அனுபவம் என்பதுதான் அறிவை வளர்க்கிறது. பூமியில் அதிக நாள் வாழ வாழ அனுபவமும் அறிவும் பெறுவாய்."

"அதெல்லாம் உண்மையாக இருக்கலாம். ஆனால், எனக்கு நீங்கள் மூளை கொடுத்தாலொழிய எனக்குத் திருப்தியாய் இராது!" என்றான் வைக்கோல் மனிதன்.

ஆஸ் கிழவன் வைக்கோல் மனிதனை உற்றுப்பார்த்து விட்டு, "அப்படியா, சரி. நான் மாயாவி அல்ல என்று சொல்லிவிட்டேன். ஆனாலும், நாளை காலை நீ வா. உன் தலை நிறைய மூளையை அடைத்து விடுகிறேன். அந்த மூளையை எப்படி உபயோகிப்பது என்று மட்டும் என்னைக் கேட்காதே. அதை நீயாகவே கண்டுபிடித்துக்கொள்ள வேண்டும்," என்றான்.

"நன்றி, மிக மிக நன்றி!" என்று சந்தோஷத்துடன் குதித்தான் வைக்கோல் மனிதன். "நீங்கள் மூளை கொடுங்கள். அதை உபயோகிக்கும் வழியை நான் எப்படியாவது கண்டுபிடித்துக்கொள்கிறேன்."

"அது சரி. எனக்குத் தைரியம் கொடுப்பதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று சிங்கம் கவலையுடன் கேட்டது.

"உனக்குத் தைரியம் நிறைய இருக்கிறது. வேண்டியதெல்லாம் தன்னம்பிக்கைதான். ஆபத்து வரும்போது

பயப்படாதவன் உலகத்திலேயே இல்லை. பயம் இருந்தாலும் ஆபத்தை எதிர்த்து நிற்பதே உண்மையான வீரம். அந்த வீரந்தான் உன்னிடம் நிறைய இருக்கிறதே !"

"இருக்கலாம். ஆபத்து . வரும்போது பயத்தை மறக்கக்கூடிய அளவுக்குத் தைரியத்தை நீங்கள் எனக்குக் கொடுத்தாலொழிய எனக்குத் திருப்தி வராது," என்றது சிங்கம்.

"நல்லது. நாளை உனக்கு அந்தத் தைரியத்தைத் தந்துவிடுகிறேன், " என்ருன் ஆஸ்.

"என் இருதயத்தைப்பற்றி என்ன சொல்கிறீர்கள் ?" என்று இரும்பு மனிதன் கேட்டான்.

"சேச்சே. இருதயம் இல்லாததே மேல். இருதயம் இருப்பதால்தான் வருத்தம் உண்டாகிறது; துக்கம் ஏற்படுகிறது. உனக்கு இருதயம் இல்லாததனுல் நீ அதிர்ஷ்டசாலி என்று நினைக்க வேண்டும்."

"அது உங்களுடைய அபிப்பிராயமாக இருக்கலாம். எனக்குத் தேவை இருதயந்தான். இருதயத்தால் எத்தனை துக்கம் நேரிட்டாலும் நான் பொருட்படுத்த மாட்டேன்," என்ருன் இரும்பு மனிதன்.

"எனக்கென்ன ? நாளைக்கு நீயும் வா. உனக்கு இருதயம் தருகிறேன். இத்தனை நாள் மாயாவி வேஷம் போட்டாயிற்று; இன்னும் கொஞ்ச நாள் அந்த வேஷம் போட்டால் போகிறது !" என்று ஆஸ் சிரித்துக்கொண்டே சொன்னுன்.

"அதெல்லாம் சரி. நான் கான்ஸாஸுக்குத் திரும்புவது எப்படி ?" என்று டோரதி கேட்டாள்,

"ஓ, அதைப்பற்றி யோசித்துத்தான் சொல்ல வேண்டும். எனக்கு இரண்டு மூன்று நாள் அவகாசம் கொடு. இங்கிருந்து பாலைவனத்தைத் தாண்டி உன் ஊருக்குப் போக ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டும். நான் செய்யப் போகும் உதவிக்குப் பதிலாக நீ ஒன்று செய்ய வேண்டும். என்ன தெரியுமா ? நான் வெறும் போலி மாயாவி, பித்தலாட்டக்காரன் என்பதை யாருக்கும் சொல்லிவிடக்

கூடாது. இதை ரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டும், தெரிந்ததா ? " என்று ஆஸ் கிழவன் கேட்டுக் கொண்டான்.

தங்களுக்குத் தெரிந்த இந்த ரகசியத்தை வேறு யாரிடமும் சொல்வதில்லை என்று நான்குபேரும் வாக்களித்துவிட்டுச் சந்தோஷமாய்த் தங்கள் அறைகளுக்குத் திரும்பினார்கள்.

# 13

---

மறுநாள் காலை வைக்கோல் மனிதன் ஆஸின் சிம்மாசன அறைக்குப் போய்க் கதவைத் தட்டினான்.

" உள்ளே வரலாம்," என்றான் ஆஸ். வைக்கோல் மனிதன் உள்ளே போனான். ஆஸ் ஆழ்ந்த யோசனையுடன் ஜன்னல் அருகே உட்கார்ந்திருந்தான்.

" மூளை பெற்றுக்கொள்வதற்காக வந்திருக்கிறேன்," என்று வைக்கோல் மனிதன் தயக்கத்துடன் சொன்னான்.

" அந்த நாற்காலியில் உட்கார். முதலில் உன் தலையைத் தனியாய் எடுத்துவிட வேண்டும். அப்போதுதான் மூளையைச் சரியான இடத்தில் வைக்க முடியும்," என்றான் ஆஸ்.

" அது சரி; நீங்கள் என் தலையைத் தனியாக எடுப்பதில் எனக்கு ஒரு தயக்கமுமில்லை. ஆனால், அதைத் திருப்பி என் உடலுடன் இணைக்கும் பொழுது அதில் நல்ல கனமான மூளை இருக்கவேண்டும்," என்றான் வைக்கோல் மனிதன்.

ஆஸ் வைக்கோல் மனிதனின் தலையைத் தனியாகப் பிரித்து எடுத்து, அதன் உள்ளிருந்த வைக்கோலை எடுத்து

எறிந்தான் ; பிறகு ஒரு படி தவிடு எடுத்து, அதில் ஏராளமான குண்டூசிகளேயும் ஆணிகளேயும் போட்டுக் கலந்து வைக்கோல் மனிதன் தலேயில் நிரப்பினுன் ; அது கீழே கொட்டிவிடாதபடி இருக்க வைக்கோலே வைத்து அடைத்தான்; பிறகு தலேயை வைக்கோல் மனிதனின் உடம்பில் மறுபடி வைத்துத் தைத்துவிட்டு, ''உனக்குக் கனமான மூளே தந்திருக்கிறேன். நீ பெரிய மேதாவியாகி விட்டாய் !'' என்ருன்.

வைக்கோல் மனிதனுக்குச் சந்தோஷம் தாங்க வில்லே. தான் பெரிதும் விரும்பிய ஆசை நிறைவேறி விட்டது அவனுக்கு மிகவும் பெருமையாக இருந்தது. ஆஸ் கிழவனுக்குப் பல தடவை நன்றி தெரிவித்துவிட்டுத் தன் நண்பர்களிடம் சென்ருன்.

வைக்கோல் மனிதன் தலேயில் மூளேயைத் திணிக் கவே, அத்தலே பெரிதாகக் காட்சி அளித்தது. டோரதி அதை வியப்புடன் பார்த்தாள்.

'' மூளே கிடைத்ததா ? எப்படி இருக்கிறது ? '' என்று டோரதி கேட்டாள்.

'' பெரிய அறிவாளி போலவே இருக்கிறது எனக்கு! மூளேயை உபயோகித்துப் பழக்கப்பட்டுப் போஞல், எனக்கு எல்லாம் தெரிந்துவிடும்,'' என்ருன் வைக்கோல் மனிதன்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த இரும்பு மனிதன், '' நான் ஆஸிடம் போய் இருதயம் வாங்கிக்கொள்ள வேண்டும்,'' என்று சொல்லிக்கொண்டே போஞன். சிம் மாசன அறையை அடைந்து அவனும் கதவைத் தட்டினுன்.

'' உள்ளே வா,'' என்ருன் ஆஸ்.

'' எனக்கு இருதயம் தருவதாய்ச் சொன்னீர்களே. வந்திருக்கிறேன்,'' என்ருன் அவன்.

'' ரொம்ப சரி. ஆஞல், முதலில் உன் மார்பில் ஒரு ஓட்டை செய்து, அது வழியாக இருதயத்தை உள்ளே வைக்க வேண்டும்,'' என்ருன் ஆஸ்.

இப்படிச் சொல்லிக்கொண்டே ஆஸ் இரும்பு வெட்டும் கத்திரி ஒன்றைக் கொண்டு வந்து இரும்பு

மனிதன் மார்பில் இடது பக்கமாக ஒரு துண்டைக் கத்தரித்துத் துளை செய்தான் ; பிறகு ஒரு மேஜையைத் திறந்து அதிலிருந்து ஒரு இருதயத்தை எடுத்தான். பட்டுத் துணியால் செய்யப்பட்டு மரத்தூள் திணிக்கப் பட்டிருந்த இருதயம் அது.

" பார்க்கப் பிரமாதமாக இல்லையா இது ? " என்று ஆஸ் கேட்டான்.

" ஆமாம். பார்க்க அழகாக இருக்கிறது," என்று இரும்பு மனிதன் சந்தோஷத்தோடு சொன்னான். அவனுக்குப் பரம திருப்தி. ஆயினும், " ஆமாம், இது நல்ல அன்பு நிறைந்த இருதயந்தானே ?" என்று கேட்டான்.

" நிச்சயமாக !" என்று சொல்லிக்கொண்டே அதை இரும்பு மனிதன் மார்புக்குள் வைத்தான் ஆஸ். பிறகு துவாரத்தை மூடி, ஈயப்பற்று வைத்து முன்போல் சரி செய்துவிட்டான்.

இதன் பின் இரும்பு மனிதன் தன் நண்பர்களிடம் திரும்பி வந்து சமாசாரத்தைச் சொன்னான். எல்லாரும் அவனை வாழ்த்தினார்கள்.

இதன் பிறகு சிங்கம் சிம்மாசன அறைக்குச் சென்று கதவைத் தட்டிற்று.

" உள்ளே வரலாம்," என்றான் ஆஸ்.

" எனக்குத் தைரியம் தருவதாய்ச் சொன்னீர்களே ; வந்திருக்கிறேன்," என்றது சிங்கம்.

" ஆகா. இதோ கொண்டு வந்து தருகிறேன்," என்று சொல்லிவிட்டு, ஆஸ் கிழவன் ஓர் அலமாரியைத் திறந்தான் ; அதிலிருந்து பெரிய பச்சை நிறப் புட்டி ஒன்றை எடுத்தான் ; அதில் இருந்த திரவத்தை வேலைப்பாடு மிகுந்த ஒரு பச்சைக் கிண்ணத்தில் ஊற்றினான்; கிண்ணத்தைச் சிங்கத்திடம் கொடுத்து, " இதைக் குடி! " என்றான். சிங்கம் அதை முகர்ந்து பார்த்துத் தனக்கு அது பிடிக்காதது போல் முகத்தைச் சுளித்து, " இது என்ன ? " என்று கேட்டது.

“ இதுவா ? இதை என்னவென்று கூறுவது ? தைரியம் என்பது ஒருவருக்குள் காணப்படும் ஒரு குணம். இந்தத் திரவத்தை நீ குடித்தாயானுல் உனக்குச் சொல்லொணுத் தைரியம் வந்துவிடும். அதனுல் இதை உடனே குடி ; சீக்கிரம் குடி ! ” என்று ஆஸ் கிழவன் வற்புறுத்தினுன்.

சிங்கம் மறு பேச்சில்லாமல் அந்தத் திரவத்தை ஒரே மடக்கில் உறிஞ்சிக் குடித்தது ; கோப்பையில் ஒரு சொட்டுகூடப் பாக்கி விடவில்லை.

“ இப்போது எப்படி இருக்கிறது ? ” என்று கேட்டான் ஆஸ்.

“ பிரமாதம் ! எனக்கு நிறையத் தைரியம் வந்துவிட்டாற்போல் இருக்கிறது !” என்று சொல்லிக்கொண்டே சிங்கம் அந்தச் சந்தோஷச் செய்தியைத் தன் சகாக்களுக்குச் சொல்லப் பாய்ந்து ஓடிற்று.

## 14

மூன்று நாட்கள் ஆஸ் கிழவனிடமிருந்து டோரதிக்கு ஒரு தகவலும் கிடைக்கவில்லை. நான்காவது நாள்தான் அவன் டோரதியைக் கூட்டிக்கொண்டு வரும்படி சொல்லியனுப்பினுன். டோரதி சிம்மாசன அறையில் சந்தோஷத்துடன் நுழைந்தாள்.

“ இப்படி உட்கார், டோரதி. இந்த மாயா ஜால உலகத்தை விட்டுப் போவதற்கு வழி கண்டு பிடித்து விட்டேன் ! ” என்று உற்சாகத்தோடு கூறினுன் ஆஸ்.

“ எங்கே ? கான்ஸாஸுக்குப் போகவா ? ” என்று டோரதி ஆசையோடு கேட்டாள்.

"கான்ஸாஸுக்கு என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ஏனென்றால், இந்த இடத்திலிருந்து கான்ஸாஸுக்கு எந்தப் பக்கமாகப் போக வேண்டும் என்றே எனக்குத் தெரியாது. ஆனால் முதலில் இந்தப் பாலைவனத்தைத் தாண்ட வேண்டும். பிறகு அங்கிருந்து உங்கள் ஊருக்குப் போகச் சுலபமான வழி கண்டு பிடித்து விடலாம்," என்றான் ஆஸ்.

"பாலைவனத்தை எப்படி நான் கடப்பது ?" என்று டோரதி கேட்டாள்.

"நான் நினைப்பதைச் சொல்லி விடுகிறேன், கேள்: நான் இந்த உலகத்துக்கு ஒரு பலூனில் வந்தேன். நீயும் காற்றில் மிதந்துதான்—புயலால் தள்ளப்பட்டு—வந்தாய். அதனால் நாம் பாலைவனத்தைத் தாண்டுவதற்குக் காற்றில் பறந்து போவதே சரியான வழி என்று தோன்றுகிறது. ஒரு புயல் காற்றை எழுப்புவது என்பது என்னால் முடியாத காரியம். ஆனால் நம்மைத் தூக்கிக்கொண்டு பறக்கிற ஒரு பெரிய பலூனைச் செய்யலாமே என்று எனக்குத் தோன்றுகிறது !" என்று ஆஸ் சொன்னான்.

"என்ன, நம்மை என்றா சொன்னீர்கள் ? என்னோடு நீங்களும் வந்துவிடப் போகிறீர்களா, என்ன ?" என்று டோரதி ஆச்சரியத்தோடு கேட்டாள்.

"ஆமாம். எனக்கு இந்த மாதிரிப் பித்தலாட்ட வேஷம் போடுவதில் வெறுப்புத் தட்டி விட்டது. பேசாமல் உன்னோடு கான்ஸாஸுக்குத் திரும்பிப்போய் ஏதாவது சர்க்கஸில் சேர்ந்து விடலாம் என்று தோன்றுகிறது," என்றான் ஆஸ்.

"நீங்கள் என்னுடன் வருவது பற்றி மிக்க சந்தோஷம் !" என்றாள் டோரதி.

"ரொம்ப நன்றி ! நீ இந்தப் பட்டுத் துண்டுகளைத் தைக்க உதவி செய்தால் நாம் பலூன் தயாரிக்கும் வேலையை இப்பொழுதே ஆரம்பிக்கலாம்," என்று சொன்னான் ஆஸ்.

டோரதி ஊசி, நூல் எடுத்துக்கொண்டாள். தேவையான அளவில் பட்டுத் துண்டுகளை ஆஸ் கத்தரித்துப் போட, டோரதி அவைகளைத் தைத்துக்கொண்டே வந்தாள். எல்லாத் துண்டுகளையும் ஒன்று சேர்த்துத் தைத்து முடிக்க மூன்று நாட்களாயின. தைத்து முடிந்ததும், அது இருபது அடிக்கும் அதிகமான குறுக்களவில், பெரிய பந்தைப் போல இருந்தது. பலூனில் வெப்பக் காற்றை நிரப்பும் பொழுது அக்காற்று பட்டுத்துணியின் இழைகள் வழியே வெளியில் சென்று விடாமல் தடுக்கப் பந்தின் உட்புறத்தில் ஆஸ் வஜ்ஜிரத்தை நிறையத் தடவிவிட்டான். பலூன் தயாராகி விட்டது.

"நாம் பலூனில் உட்கார்ந்துகொண்டு போவதற்கு ஒரு பெரிய கூடையைக் கட்டித் தொங்கவிட வேண்டும்," என்று சொல்லி, ஆஸ், பச்சை நிறச் சேவகனை ஒரு கூடை கொண்டுவரும்படி அனுப்பினான். கூடை வந்ததும் அதைக் கயிறுகளால் பிணைத்து, பலூனிலிருந்து கீழே தொங்கும்படி கட்டினான்.

வேலை முடிந்ததும், ஆஸ் மாயாவி, மேக மண்டலத்தில் வசிக்கும் தனது சகோதரனை இன்னொரு மாயாவியைப் பார்ப்பதற்குத் தான் போவதாகத் தன் பிரஜைகளுக்குச் செய்தி தெரிவித்தான். அது நகரெங்கும் பரவியது. இந்த அதிசயத்தைப் பார்க்க எல்லாரும் கூடினார்கள்.

ஆஸ் பலூனை வெளியே திறந்த வெளிக்குத் தூக்கிக் கொண்டு போகச் செய்தான். அங்கே இரும்பு மனிதன் நிறைய மரங்களை வெட்டிக் குவித்து, நெருப்பு மூட்டியிருந்தான். ஆஸ் பலூனின் வாயை நெருப்புக்கு நேராக மேலே பிடித்தான். நெருப்பிலிருந்து கிளம்பிய உஷ்ணக் காற்று பலூனுக்குள்ளே செல்லச் செல்லக் கொஞ்சம் கொஞ்சமாகப் பலூன் பெரிதாக ஆரம்பித்தது. சற்று நேரத்திற்குள் பட்டுப்பந்து முழுவதும் வெப்பக் காற்று நிறைந்து பலூன் மேல்நோக்கி நகரத் தொடங்கியது.

பலூன் நன்ருக மேலே எழும்பி அதிலிருந்து தொங்கும் கூடை மட்டும் லேசாகத் தரையைத் தொட்டுக் கொண்டிருந்த போது ஆஸ் மாயாவி கூடைக்குள் ஏறிக் கொண்டான். பிறகு தன் பிரஜைகள் எல்லோரும் கேட்கும் படியாக ஆஸ், "நான் என் சகோதரரைப் பார்த்துவிட்டு வரப்போகிறேன். நான் இல்லாத போது இதோ இங்கு உள்ள வைக்கோல் மனிதர் உங்களை ஆளுவார். என்னைப் போலவே அவரையும் மதித்துப் பணிவுடன் நடக்குமாறு உங்களுக்குக் கட்டளையிடுகிறேன்!" என்று உரக்கச் சொன்னுன்.

பிறகு அவன், "டோரதி, சீக்கிரம் வா! இல்லா விட்டால் பலூன் மேலே எழும்பி விடும்!" என்று கத்திக் கூப்பிட்டான்.

டோரதி பக்கத்திலேயேதான் நின்றுகொண்டிருந் தாள். ஆஸ் மாயாவி அவளைக் கூடைக்குள் கூட்டிக் கொள்வதற்காகக் கைகளை நீட்டினுன். துரதிர்ஷ்ட வசமாக, அதற்குள், பலூனைத் தரையுடன் சேர்த்துக் கட்டியிருந்த கயிறு அறுந்தது. டோரதி ஏறுவதற்குள் பலூன் மேலே எழும்பி விட்டது!

"திரும்பி வாருங்கள்! திரும்பி வாருங்கள்! நானும் உங்களோடு வர வேண்டும்!" என்று டோரதி கூவினுள்.

"ஐயோ, குழந்தாய்! என்னுல் திரும்பி வரமுடி யாதே!" என்று ஆஸ் கூடையிலிருந்து சொல்லிப் பிறகு "நான் போய் வருகிறேன்!" என்று கத்தினுன்.

"போய் வாருங்கள்!" என்று ஜனங்கள் எல்லாரும் ஆரவாரித்தார்கள். எல்லாருடைய கண்களும் கூடை யோடு பலூனில் வானத்தில் எழும்பிச் சென்ற ஆஸ் மாயாவியையே பார்த்துக்கொண்டிருந்தன.

அதுதான் ஆஸ் மாயாவியை அவர்கள் கடைசி யாகப் பார்த்தது.

# 15

வீடு போய்ச் சேர்வதற்கிருந்த ஒரே நம்பிக்கையும் போய்விட்டதே என்று டோரதி விம்மி விம்மி அழுதாள். ஆனால், நன்ருக யோசனை செய்து பார்த்தபோது, போகுமிடம் தெரியாமல் வானத்தில் – ஒரு பலூனில் – மிதந்து செல்லாமல் தப்பியதும் நல்லதே என்பது தெளிவாயிற்று. ஆனால், ஆஸை விட்டுப் பிரிந்ததில் அவளுக்கும் நண்பர்களுக்கும் வருத்தமே.

இப்பொழுது வைக்கோல் மனிதன்தான் மரகத நகரின் மன்னன். அவன் ஒரு மாயாவி அல்ல என்ருலும் எல்லா மக்களும் அவனைப் பற்றிப் பெருமையுடன் பேசிக்கொண்டார்கள். "இந்த மாதிரி வைக்கோல் திணிக்கப்பட்ட மனிதன் ஆளும் வேறு நகரம் இந்த உலகத்திலேயே கிடையாது!" என்ருர்கள் அவர்கள்.

ஆஸ் மாயாவி பலூனில் பறந்து சென்றதற்கு மறுநாள் காலை நம் நண்பர்கள் நால்வரும் மேலும் செய்ய வேண்டியதைப் பற்றி ஆலோசிக்கச் சிம்மாசன அறையில் கூடினுர்கள். பெரிய சிம்மாசனத்தில் வைக்கோல் மனிதன் உட்கார்ந்துகொண்டான். மற்றவர்கள் எதிரே மரியாதையோடு நின்ருர்கள்.

"நமக்கு அதிர்ஷ்டம் இல்லை என்று சொல்வதற்கில்லை. இந்த அரண்மனையும், மரகத நகரும் நம்முடையவையாகி விட்டன. நமக்கு இஷ்டமானதைச் செய்யலாம். என்னைப் பொருத்தவரையில் எனக்குத் திருப்தியே!" என்ருர் புதிய அரசர்.

"ஆனல் நான் இங்கே இருக்க விரும்பவில்லை. கான்ஸாஸுக்குப் போய் என் பெரியப்பா, பெரியம்மா இவர்களோடு வசிக்கவே விரும்புகிறேன்," என்று அழுத்தந்திருத்தமாகக் கூறினுள் டோரதி.

"நான் டோரதியோடு போகப் போகிறேன். எனக்கு இந்த நகர வாழ்க்கை அலுத்துப் போய்விட்டது. எனக்குக் காடுகளையும் நாட்டுப்புறத்தையும் பார்க்க வேண்டும் போல இருக்கிறது. நான் நிஜமாகவே காட்டு மிருகந்தானே, உங்களுக்குத தெரியாதா? தவிர, டோரதிக்குத் துணையாக யாராவது போக வேண்டுமல்லவா ?" என்றது சிங்கம்.

"அது நிஜந்தான். என் கோடாலியின் உதவியும் டோரதிக்குத் தேவையாக இருக்கலாம். அதனால் நானும் தென்திசை நாட்டிற்குப் போகப் போகிறேன்," என்றான் இரும்பு மனிதன்.

"அப்படியானால் நாம் எப்பொழுது புறப்படலாம் ?" என்று வைக்கோல் மனிதன் கேட்டான்.

"என்ன, நீயும் வருகிறாயா !" என்று எல்லாரும் ஆச்சரியத்தோடு கேட்டனர்.

"சந்தேகமென்ன! டோரதி இல்லாவிட்டால் எனக்கு மூளையே கிடைத்திருக்காது. அவள்தானே சோளக் கொல்லையில் தொங்கிக்கொண்டிருந்த என்னைத் தூக்கி விட்டு இந்த மரகத நகருக்கு அழைத்துக்கொண்டு வந்தாள். என்னுடைய அதிர்ஷ்டமெல்லாம் அவளால் கிடைத்ததுதான். ஆகையால், அவள் கான்ஸாஸுக்கு சௌக்கியமாகக் கிளம்பும்வரை நான் அவளை விட்டுப் பிரியவே மாட்டேன். நாம் நாளைக்குக் கிளம்புவோம். வெகுதூரம் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கலாம். அதற்கான ஏற்பாட்டை இப்பொழுதே செய்வோம்," என்றான் வைக்கோல் மனிதன்.

# 16

டோரதியும் நண்பர்களும் மறுபடி கிளம்பிவிட்டதைப் பார்த்த கோட்டை வாசல் காவல்காரனுக்கு, இவர்கள் எதற்காக இந்த அழகான நகரை விட்டுப்போய்ப் புதிய அபாயங்களில் அகப்பட்டுக்கொள்ள வேண்டும் என்பது புரியவில்லை. ஆனாலும், அவன் அவர்களுடைய கண்ணாடிகளைக் கழற்றிப் பெட்டியில் வைத்துவிட்டு, அவர்கள் பிரயாணம் தங்கு தடையின்றி நடக்க வேண்டும் என்று வாழ்த்தி வழியனுப்பினான். வைக்கோல் மனிதனிடம், "நீங்கள் இப்பொழுது எங்கள் அரசராதலால் உங்களால் எவ்வளவு சீக்கிரம் திரும்பி வர முடியுமோ அவ்வளவு சீக்கிரம் வந்துவிட வேண்டும்," என்று கேட்டுக் கொண்டான்.

நண்பர்கள் தென்திசை நோக்கிப் பயணம் ஆரம்பித்ததும் சூரியன் நன்றாகப் பிரகாசிக்கத் தொடங்கினான். அவர்கள் கடைசியாக ஒரு முறை திரும்பிப் பச்சைப் பசுமையாக ஒளிர்ந்துகொண்டிருந்த மரகத நகரைப் பார்த்துவிட்டு மேலே நடந்தனர்.

முதல் நாள் அவர்கள் மரகத நகரைச் சூழ்ந்திருந்த பசுமையான வயல்கள் வழியாகவும், கண்ணைப் பறிக்கும் பூக்கள் குலுங்கிய பூங்காக்கள் வழியாகவும் பயணம் செய்தார்கள். அவர்கள் அன்றிரவு வெறும் புல் தரையில் படுத்து உறங்கினர். மேலே நட்சத்திரங்கள் சுடர்விட்டுப் பிரகாசிக்க, அவர்கள் களைப்புத் தீர அயர்ந்து தூங்கினார்கள்.

மறுநாள் காலை அவர்கள் எழுந்து மேலும் நடந்தனர். வழியில் அடர்ந்த காடு ஒன்று குறுக்கிட்டது. அதைச் சுற்றிக் கடந்து செல்லலாமென்றால் அது எல்லாப்

பக்கங்களிலும் முடிவின்றிப் பரந்து கிடந்தது. அதற்குள் நுழைந்து கடப்பதைத் தவிர, வேறு வழி தெரியவில்லை. ஆகவே, அதனுள் எளிதில் புகுந்து செல்லக்கூடிய இடத்தைத் தேடலாயினர். பரந்த கிளைகளோடு கூடிய ஒரு மரத்தின்கீழே அவர்கள் போவதற்கேற்ற இடைவெளி இருந்ததை வைக்கோல் மனிதன் பார்த்தான். ஆனால், அவன் மரத்துக்குக் கீழே சென்றதும், மரக்கிளைகளில் ஒன்று கையைப்போல் அசைந்து வந்து அவனைப் பிடித்துத் தூக்கி, முறுக்கி, வீசியெறிந்தது. அவன் மற்றவர்களுக்குப் பக்கத்தில் வந்து விழுந்தான். வைக்கோல் மனிதனுக்கு எவ்விதக் காயமும் படவில்லை என்றாலும், அவன் ஆச்சரியத்தால் செயலற்றவன்போல் கிடந்தான். டோரதி அவனைத் தட்டித் தூக்கி நிறுத்தினாள்.

அப்போது சிங்கம், "இதோ இன்னொரு இடைவெளி இருக்கிறது!" என்று கூறி மரங்களிடையே இருந்த மற்றோர் இடைவெளியைக் காட்டிக் கூப்பிட்டது. இதற்குள் ஆச்சரியம் தெளிந்தெழுந்த வைக்கோல் மனிதன், "நானே முதலில் போய்ப் பார்க்கிறேன். என்னை அம்மரக்கிளை தூக்கிப் போட்டாலும் எனக்கு அடிபடாதல்லவா?" என்று சொல்லிக்கொண்டே சிங்கம் காட்டிய இடைவெளியில் புகுந்தான். மரத்தின் கிளை முன்போலவே அவனைப் பிடித்துத் தூக்கி விட்டெறிந்தது.

"இது விசித்திரமாக இருக்கிறதே! என்ன செய்யலாம்?" என்றாள் டோரதி. இரும்பு மனிதன், "நான் போய்ப் பார்க்கிறேன்! என்று சொல்லிக்கொண்டே முதல் மரத்தை நோக்கி நடந்தான். மரத்தின் பெரிய கிளை ஒன்று அவனைப் பிடிப்பதற்காகத் தாழ்ந்தது. உடனே இரும்பு மனிதன் தன் கோடாலியால் கிளையை இரண்டு துண்டாக வெட்டித் தள்ளினான். வலியால் துடிப்பது போல மரத்தின் எல்லாக் கிளைகளும் துடித்தன. இரும்பு மனிதன் மரத்தின்கீழே நடந்து சென்றபடி, "வேகமாக ஓடி வாருங்கள்!" என்று மற்றவர்களையும் கூப்பிட்டான். எல்லாரும் அவனைப் பின் தொடர்ந்து அபாயமின்றி மரத்

தைத் தாண்டிச் சென்றனர். காட்டிலிருந்த மற்ற மரங்கள் அவர்களுக்கு ஒரு தொந்தரவும் தரவில்லை. நண்பர்கள் வேகமாக நடந்து காட்டின் மறு எல்லையை அடைந்தனர்.

அங்கே அவர்கள் கண்டது அவர்களை ஆச்சரியத்தில் மூழ்கடித்தது! காட்டின் எல்லை முடிந்ததும் அங்கே ஓர் உயரமான மதில் சுவர் இருந்தது. வெள்ளை நிறச் சைனுக் களிமண்ணினுல் கட்டப்பட்ட பீங்கான் மதில் சுவர் அது! அச்சுவர் மிக உயரமாகவும் வழவழப்பாகவும் இருந்தது.

"இந்த மதில் சுவரை நாம் தாண்டிப் போகவேண்டும். இதில் ஏற ஓர் ஏணி செய்கிறேன்," என்று கூறி, இரும்பு மனிதன் அவ்வேலையில் ஈடுபட்டான்.

# 17

---

இரும்பு மனிதன் ஏணி செய்துகொண்டிருக்கும் நேரத்தில் டோரதி சற்றுப் படுத்துத் தூங்கினுள்.

சிறிது நேரத்தில் ஏணி தயாராகி விட்டது. முதலில் வைக்கோல் மனிதன் ஏணியில் ஏறினுன். அவனுக்குச் சரியாக ஏறவே தெரியவில்லை. அவன் கீழே விழாமல் பிடித்துக்கொள்ளப் பின்னுலேயே டோரதி ஏறினுள். மதில் சுவரின் உச்சியை அடைந்து அவன் அப்பால் பார்த்ததும், "ஆ, ஆ, என்ன!" என்று ஆச்சரியத்தோடு கூறினுன். "உம், மேலே போ," என்று டோரதி சொன்னுள். வைக்கோல் மனிதன் சுவரில் ஏறி உட்கார்ந்துகொண்டான்.

டோரதி ஏணியின் உச்சியை அடைந்ததும் சுவரின் மேலே எட்டிப் பார்த்தாள். அவளும் வைக்கோல் மனிதனைப்

போலவே, "ஆ, ஆ!" என்று ஆச்சரியத்தோடு கத்தினுள்.

அடுத்தாற்போல் சிங்கமும், பிறகு இரும்பு மனிதனும் ஏறினுர்கள். அவர்களும் சுவரின் மறுபுறம் பார்த்ததும் ஆச்சரியத்தோடு கத்தினுர்கள்.

மதிலுக்கு அப்பால் பரந்து கிடந்தது ஒரு பெரிய பிரதேசம். அங்கே தரை முழுவதும் பீங்கானைப் போல வழ வழப்பாகவும் வெண்மையாகவும் இருந்தது. பீங்கானல் செய்யப்பட்டதும், அழகான வர்ணம் பூசப் பெற்றதுமான வீடுகள் அங்கே நிறைய இருந்தன. வீடுகள் எல்லாம் சின்னஞ்சிறியனவாக இருந்தன. அவற்றில் மிகப் பெரிய வீடே டோரதியின் இடுப்பளவு உயரந்தானிருந்தது. அங்கங்கே அழகான சின்னஞ்சிறிய பண்ணைகளும், அவற்றைச் சுற்றிப் பீங்கான் வேலியும் தென்பட்டன. பண்ணையில் நிறைய பசுக்களும், ஆடுகளும், குதிரை களும், பன்றிகளும், கோழிக்குஞ்சுகளும் கும்பல் கும்பலாக இருந்தன. அவை எல்லாமே பீங்கானல் ஆனவை!

இவையெல்லாவற்றையும்விட அதிசயம் என்ன வென்ருல் அங்கிருந்த ஜனங்கள்தான். அவர்கள் உடல், உடை எல்லாம் பீங்கானல் ஆனவையே. அவர்கள் எல்லாரும் பொம்மைகள் போலச் சின்னஞ்சிறியவர்களாய் இருந்தார்கள். அவர்களில் மிக உயரமானவர்கள்கூட டோரதியின் முழங்கால் அளவுதான் இருந்தனர்.

"ஆமாம், நாம் எப்படி சுவரிலிருந்து கீழே இறங்கு வது?" என்று டோரதி கேட்டாள்.

ஏணி மிகவும் கனமாக இருந்ததால் அவர்களால் அதைத் தூக்கிச்சுவரின் மறுபுறம் வைக்க முடியவில்லை. ஆகையால், வைக்கோல் மனிதன் முதலில் கீழே குதித் தான். மற்றவர்கள் அவன்மீது ஒவ்வொருவராகக் குதித் தனர். வைக்கோல் மனிதன்மேல் அவர்கள் குதித்ததால் அவர்களுக்கு அடிபடவில்லை. வைக்கோல் மனிதனுக்கும் எவ்விதக் கேடும் விளையவில்லை.

" நாம் இந்த அதிசயப் பிரதேசத்தின் வழியாகத்தான் மறுபுறம் போக வேண்டும். நேராகத் தெற்கு நோக்கிப் போகாமல் சுற்றி வளைத்துக்கொண்டு போவது சரியல்ல," என்ருள் டோரதி.

அவர்கள் அந்தப் பீங்கான் நாட்டின் வழியே நடக்கலானுர்கள். அவர்கள் போகும் வழியில் முதலில் ஒரு பீங்கான் பால்காரி, பீங்கான் பசுவைப் பால் கறந்து கொண்டிருந்தாள். அவர்களைக் கண்டதும் பசு மிரண்டு பின்னங்காலால் பால்காரியை ஓர் உதை விட்டது. பால் காரி உருண்டு அடித்து விழுந்தாள். பால் பாத்திரம் உருண்டு, பீங்கான் தரையின்மேல் விழுந்தது. இதனுல் பசுவுக்கு ஒரு கால் ஒடிந்துவிட்டது. பால் பாத்திரம் சுக்கல் சுக்கலாக உடைந்துவிட்டது. பாவம், பால்காரிக் குக்கூட முழங்கையில் சரியான அடி. இதையெல்லாம் பார்த்ததும் டோரதிக்குத் தூக்கி வாரிப்போட்டது.

பால்காரி, " என்ன காரியம் செய்து விட்டீர்கள், பாருங்கள் ! என் பசு காலை ஒடித்துக்கொண்டு விட்டது. அதை ஒட்டும் கடைக்குப் போய்த்தான் ஒட்ட வைக்க வேண்டும். இப்படி பசு மிரளும்படி உங்களை யார் இங்கே வரச் சொன்னது ?" என்று கோபமாகக் கேட்டாள்.

" தயவு செய்து எங்களை மன்னித்து விடு !" என்று டோரதி கேட்டுக்கொண்டாள்.

ஆனுல், அந்தப் பால்காரி மிகவும் கோபமாக இருந்த தால் பதில் ஏதும் சொல்லவில்லை. டோரதிக்கு இந்த நிகழ்ச்சி மிகவும் வருத்தத்தை உண்டாக்கியது.

" நாம் இங்கே ஜாக்கிரதையாக நடக்க வேண்டும். இல்லாவிட்டால், இந்த அழகான சின்னஞ்சிறு மக்களுக்கு ஏதேனும் பெரிய துன்பம் விளைத்து விடுவோம்," என் ருன் இரக்கமுள்ள இரும்பு மனிதன்.

அவர்கள் இன்னும் கொஞ்சம் தூரம் சென்றதும், அழகான உடை தரித்த இளவரசி ஒருத்தியை டோரதி கண்டாள். அவள் இவர்களைப் பார்த்ததும் அப்படியே

சற்று நேரம் நின்று பிறகு ஓட ஆரம்பித்தாள். டோரதி அவளை மேலும் நன்றாகப் பார்க்க எண்ணி அவளைத் தொடர்ந்து ஓடினாள். ஆனால் அந்தப் பெண், "தயவு செய்து என்னைத் துரத்தாதே! என்னைத் துரத்தாதே!" என்று கத்தினாள்.

அவளுடைய பயந்த குரலைக் கேட்டதும் டோரதி அப்படியே நின்றுவிட்டாள்; பிறகு அவளைப் பார்த்து, "ஏன் அப்படிச் சொல்கிறாய்?" என்று கேட்டாள்.

அந்த இளவரசி சற்றுத் தூரத்தில் நின்றுகொண்டு, "நான் ஓடினால் கீழே விழுந்துவிடுவேன். கீழே விழுந்தால் என் உடம்பு சுக்கு நூறாகிவிடும்," என்றாள்.

"உன் உடல் உடைந்து போனால் ஒட்டிக்கொள்ள முடியாதா?" என்றாள் டோரதி.

"மறுபடி ஒட்ட வைக்கலாம். ஆனால் ஒரு தடவை உடைந்த பின் எப்படித்தான் ஒட்ட வைத்தாலும் முன் போல அழகாக இருக்குமா?" என்றாள் இளவரசி.

"அப்படியா! ஆனால் நீ மிகவும் அழகாக இருப்பதால் உன்னைக் கண்டதும் எனக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது. உன்னை என்னோடு கான்ஸாஸுக்குத் தூக்கிக் கொண்டுபோய், என் பெரியம்மாவின் அலமாரியில் வைக்கட்டுமா?" என்றாள் டோரதி.

"அப்படிச் செய்தால் எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கும். எங்கள் நாட்டில் நாங்கள் நிம்மதியாக வாழ்கின்றோம். இங்கே எங்கள் இஷ்டப்படி பேசலாம்; இஷ்டப்படி எங்கு வேண்டுமானாலும் போகலாம். இந்த நாட்டை விட்டு வெளியே போனால் அவ்வளவுதான். எங்கள் மூட்டுக்கள் அப்படியே விறைப்பாக நின்றுவிடும். நாங்கள் பொம்மைகள் போல் பேசாமல் நின்றுகொண்டிருக்க வேண்டியதுதான். இங்கேயே, எங்கள் நாட்டிலேயே, எங்கள் வாழ்க்கை மிகவும் சந்தோஷமாக இருக்கிறது," என்றாள் பீங்கான் இளவரசி.

"அப்படியானால் நீ வருந்தும்படி ஏதும் செய்ய மாட்டேன். நான் போய் வருகிறேன்," என்றாள் டோரதி.

" போய் வா," என்று இளவரசி விடையளித்தாள்.

டோரதியும் நண்பர்களும் மறுபடி மிக ஜாக்கிரதையாக நடந்து அரைமணியில் அந்த நாட்டின் மறு புறத்தை அடைந்தனர். அங்கே இன்னொரு மதில் சுவர் இருந்தது. ஆனால் அது முதல் சுவர் அளவு உயரமாக இல்லை. அவர்கள் சிங்கத்தின் முதுகின்மேல் ஏறி, அச்சுவரைத் தாண்டினார்கள். பிறகு சிங்கம் ஒரே தாவில் அம்மதிலைக் கடந்தது. அது தாவினபோது அதனுடைய வால் ஒரு மாதாகோவிலின்மேல் படவே, அம்மாதாகோவில் சுக்கு நூறாக நொறுங்கிவிட்டது!

" ஐயோ! மாதாகோவில் இடிந்துவிட்டதே! என்ன செய்வது ?" என்று டோரதி வருத்தப்பட்டாள். பிறகு "நல்ல வேளையாக நாம் ஒரு பசுவின் காலையும், ஒரு மாதா கோவிலையும் மட்டும் உடைத்தோமே தவிர வேறு பெரிய துன்பம் ஏதும் இந்த ஜனங்களுக்குச் செய்யவில்லை. தொடுவதற்கு முன்பே உடைந்து போகிறார்களே! நாம் என்ன செய்வது!" என்று டோரதி தன்னைத்தானே தேற்றிக்கொண்டாள்.

"நல்ல வேளை, நான் இவர்களைப் போலல்லாமல் வைக்கோலால் செய்யப்பட்டிருக்கிறேன். என் உடலில் எளிதில் அடிபடுவதில்லை. என் வைக்கோல் உடம்பு மிகவும் மோசம் என்று நினைத்தேன். ஆனால் வைக்கோல் மனிதனையும்விட மோசமான நிலைமையில் உள்ளவர்களும் உலகத்தில் இருக்கிறார்கள் என்பது இப்பொழுதுதான் விளங்குகிறது," என்றான் வைக்கோல் மனிதன்.

# 18

பீங்கான் சுவருக்கப்பால் இருந்த பிரதேசம் சகதியும் புதைமணலும் நிறைந்த இடமாக இருந்தது. எங்கும் உயர மான கோரைப்புல் வளர்ந்திருந்தது. இருந்த போதிலும் நம் நண்பர்கள் ஜாக்கிரதையாக நடந்து சென்று கடைசியில் சகதியற்ற கெட்டியான நிலப்பகுதியை அடைந்தார்கள். ஆனால், அப்பகுதி புதர்க் காடாய் இருந்தது. அப்புதர்க் காட்டின் நடுவே நெடுந்தூரம் நடந்து சென்று அலுப்படைந்தனர். முடிவில் மற்ெருரு மாபெருங்காடு குறுக்கிட்டது. அங்கே வளர்ந்திருந்த மரங்கள் முன்பு இவர்கள் எக்காட்டிலும் கண்டிராத அளவு உயரமும் வயதும் வாய்ந்தவையாக இருந்தன.

சிங்கம் சுற்றுமுற்றும் பார்த்து சந்தோஷத்துடன், " இந்தக் காடு எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. என் வாழ்நாள் முழுவதையும் இங்கே கழிக்க விரும்புகிறேன். என் மாதிரி காட்டு மிருகத்துக்கு இதைவிடச் சிறந்த காடு கிடைக்காது," என்றது.

அவர்கள் இருட்டும் வரை காட்டுக்குள்ளே நடந்து சென்றார்கள். அதற்குமேல் நடக்க முடியாமல் போகவே டோரதி, தோத்தோ, சிங்கம் மூவரும் தூங்கச் சென்றனர்.

விடிந்ததும் அவர்கள் மறுபடி நடக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் அதிக தூரம் போவதற்குள் சற்றுத் தொலைவிலிருந்து ஒரு விநோத உறுமல் கேட்டது. காட்டுப் பாதை வழியே மேலும் நடந்து சென்று ஒரு திறந்த வெளியை அடைந்தார்கள் ; அங்கே நூற்றுக் கணக்கான காட்டு விலங்குகள் கூடியிருப்பதைக் கண்டார்கள். அக்கூட்டத்திலிருந்த புலிகளுள் மிகப் பெரிய புலி ஒன்று சிங்கத்தினிடம் வந்து, வணங்கி, " காட்டு

மிருகங்களின் ராஜாவே, வருக ! நல்ல சமயத்துக்கு வந்தீர்கள். எங்கள் விரோதியைக் கொன்று காட்டில் மீண்டும் அமைதியை உண்டாக்கச் சரியான சமயத்தில் வந்தீர்கள் !'' என்றது.

"உங்களுக்கு என்ன துன்பம் ?'' என்று சிங்கம் கம்பீரமாகக் கேட்டது.

"காட்டுக்குப் புதிதாய் ஒரு விரோதி வந்திருக்கிறது. அதனால் எங்கள் எல்லாருக்குமே அபாயம் மூண்டிருக்கிறது. அது பார்ப்பதற்குப் பெரிய சிலந்தி போல இருக்கிறது. அதன் உடல் யானை அளவும், கால்கள் பெரிய மரங்களைப் போலவும் இருக்கின்றன. எட்டுக் கால்களால் காட்டில் நடந்து போகும் போதே காட்டு விலங்குகளைக் காலால் பிடித்து வாயில் போட்டுக்கொண்டு விடுகிறது ; சிறு சிலந்திகள் ஈயைப் பலகாரம் செய்வதுபோல் கபளீகரம் செய்துவிடுகிறது. இந்தக் கொடிய அரக்கன் இருக்கும் வரை எங்களில் யாருக்கும் நிம்மதி கிடையாது. எங்களை எப்படிப் பாதுகாத்துக்கொள்வது என்று யோசனை செய்யக் கூட்டம் போட்டோம். நீங்களும் வந்து சேர்ந்தீர்கள்,'' என்று புலி சொல்லிற்று.

சிங்கம் ஒரு நிமிஷம் யோசனை செய்தது. "இந்தக் காட்டில் சிங்கங்கள் உண்டா ?'' என்று கேட்டது.

"இப்பொழுது இல்லை ; முன்பு இருந்தன. இந்தக் கொடிய மிருகம் அவற்றையெல்லாம் விழுங்கிவிட்டது. ஆனால், அந்தச் சிங்கங்களெல்லாம் உங்களைப் போல இவ்வளவு பலசாலியாகவும் பராக்கிரமம் உள்ளனவாகவும் இருக்கவில்லை,'' என்றது புலி.

"உங்கள் விரோதியை நான் ஒழித்துவிட்டால், நீங்கள் எனக்குப் பணிந்து நடந்து என்னை உங்கள் காட்டு ராஜாவாக ஏற்பீர்களா ?'' என்று சிங்கம் கேட்டது.

"சந்தோஷத்துடன் ஏற்போம்,'' என்று புலி சொல்லிற்று. மற்ற மிருகங்களும் ஒரே குரலில், "நாங்களும் ஏற்போம்,'' என்று கத்தின.

"சரி. இந்த ராட்சதச் சிலந்தி எங்கே இருக்கிறது?" என்று கேட்டது சிங்கம்.

"அங்கே மரங்களுக்கு நடுவில்," என்று புலி தன் காலால் திசையைக் காட்டிற்று.

"என் நண்பர்களைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்ளுங்கள். நான போய் அதை ஒழித்துவிட்டு வருகிறேன்," என்று சிங்கம் கம்பீரமாகக் கூறிவிட்டு. நண்பர்களிடம் விடை பெற்றுக்கொண்டு சிலந்தியுடன் சண்டை பிடிக்கச் சென்றது.

நல்ல வேளையாக, சிங்கம் போனபோது ராட்சதச் சிலந்தி தூங்கிக்கொண்டிருந்தது. சிங்கம் கூர்மையான நகங்களோடு கூடிய தன் முன்னங்காலால் பலமாக ஓங்கி ஓர் அறை அறைந்தது. சிலந்தியின் தலை உடலிலிருந்து துண்டிக்கப்பட்டுத் தனியாகப் போய் விழுந்தது. பிறகு சிங்கம் காட்டு மிருகங்களிடம் திரும்பி வந்து, "உங்கள் விரோதி தொலைந்தே போயிற்று. இனி அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை," என்றது.

எல்லா மிருகங்களும் சிங்கத்தைப் பணிந்து, அதைத் தம் அரசனாக ஏற்றுக்கொண்டன. டோராதியை வழி அனுப்பிவிட்டுத் திரும்பிவந்து அவர்களை ஆளுவதாகச் சொல்லிவிட்டுப் பிரயாணமாயிற்று சிங்கம்.

## 19

---

நண்பர்கள் நால்வரும் காட்டின் மீதிப் பகுதியைப் பத்திரமாய்க் கடந்தார்கள்; அவர்கள் காட்டைவிட்டு வெளியே வந்ததும் அங்கே ஒரு பெரிய மலை இருந்ததைக் கண்டார்கள். அது ஒரே பாறைகள் நிறைந்ததாக இருந்தது.

முதல் பாறையை அவர்கள் நெருங்கியதும், "முன்னால் போகாதே! நில்!" என்று ஒரு முரட்டுக் குரல் கேட்டது.

"நீ யார்?" என்று வைக்கோல் மனிதன் கேட்டான். பாறைக்கப்பாலிருந்து ஒரு தலை வெளியே தெரிந்தது. அது தன் முரட்டுக் குரலில், "இந்த மலை எங்களைச் சேர்ந்தது. யாரும் மலையைத் தாண்டிச் செல்ல நாங்கள் அனுமதிப்ப தில்லை," என்றது.

"நாங்கள் மலையைத் தாண்டிப் போயாக வேண் டுமே! நாங்கள் குவாட்லிங்குகள் நாட்டுக்குப் போகி றோம்," என்று வைக்கோல் மனிதன் சொன்னான்.

"நீங்கள் மலையைத் தாண்ட விடமாட்டோம்," என் றது குரல். உடனே பாறைக்குப் பின்னாலிருந்து ஓர் அதிசய மனிதன் வெளியே வந்தான். அம்மாதிரி மனிதனை அவர் கள் பார்த்ததே இல்லை.

அவன் குள்ளமாகவும் பருத்தும் இருந்தான். அவன் தலை பெரியதாக இருந்தது. உச்சந்தலை கொட்டாப்புளி போலத் தட்டையாக இருந்தது. கழுத்து பல சுருக்கங்கள் நிறைந்ததாய்த் தடித்து இருந்தது. வேடிக்கை என்ன வென்றால் அந்த மனிதனுக்குக் கைகளே இல்லை!

இப்படிப்பட்ட கையற்ற மனிதன் நம்மை என்ன செய்துவிட முடியும் என்று வைக்கோல் மனிதன் நினைத் தான். தங்களை மலைமேல் ஏறுமல் தடுக்க இவனால் எப்படி முடியும் என்று நினைத்துக்கொண்டு, "உனக்குப் பிடிக் கிறதோ இல்லையோ, நாங்கள் மலையைத் தாண்டிப் போயாக வேண்டும்!" என்று சொல்லிக்கொண்டே தைரியமாக முன்னே நடந்தான்.

மறு விநாடி அந்த மனிதனுடைய கழுத்து நீண்டது. அவன் தலை மின்னல் வேகத்தில் வெளியே பாய்ந்தது. கொட்டாப்புளி போன்ற அவன் உச்சந்தலை வைக்கோல் மனிதன் உடம்பில் வந்து தாக்கியது. வைக்கோல் மனிதன் குட்டிக்கரணம் போட்டுக்கொண்டு மலைச்சரிவில் உருண்டு உருண்டு விழுந்தான். அந்தத் தலை வெளியே பாய்ந்த அதே வேகத்தில் உடலுடன் சேர்ந்துகொண்டது. டோரதி

ஓடிப்போய் வைக்கோல் மனிதன் கையைப் பிடித்துத் தூக்கி நிற்க வைத்தாள்.

கொட்டாப்புளித் தலையன் முரட்டுக் குரலில் சிரித்துக் கொண்டே, ''நீ நினைத்தபடி இந்த மலையின்மேல் போவது அவ்வளவு எளிதான காரியமல்ல, தெரிந்துகொண்டாயா ?'' என்றான்.

மற்றப் பாறைகளிலிருந்து பல முரட்டுக் குரல்கள் சிரித்தன. பாறைக்கு ஒருவராக அம்மலைச்சரிவு முழுவதும் கொட்டாப்புளித் தலையர்கள் இருந்ததை டோரதி கண்டாள்.

வைக்கோல் மனிதனுக்கு ஏற்பட்ட சங்கடத்தைக் கண்டு அத்தலைகள் சிரித்தது சிங்கத்துக்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கியது. இடி போல உறுமிக்கொண்டு அது மலைமேல் ஏறிற்று.

மறுபடி ஒரு கொட்டாப்புளித் தலை பாய்ந்து வந்தது ; மறு நிமிடம் பீரங்கிக் குண்டால் தாக்கப்பட்டது போலச் சிங்கம் மலைச்சரிவில் உருண்டது.

சிங்கம் தன் உடலில் காயங்களுடன் டோரதியிடம் வந்து, '' இது மாதிரி கொட்டாப்புளித் தலையர்களிடம் சண்டை பிடிப்பது நம்மால் முடியாத காரியம்,'' என்றது.

" அப்படியானால், நாம் என்ன செய்யலாம் ?'' என்று கேட்டாள் டோரதி.

'' பறக்கும் குரங்குகளை இன்னும் ஒரு முறை கூப்பிட உனக்கு உரிமை உண்டே ! அவைகளை ஏன் கூப்பிடக் கூடாது ? '' என்றான் இரும்பு மனிதன்.

''சரி, அப்படியே செய்வோம்,'' என்று சொல்லி விட்டு, டோரதி தங்கக் குல்லாயைத் தலையில் அணிந்து கொண்டு மந்திரத்தை உச்சரித்தாள். குரங்குகள் வழக்கம் போல உடனே வந்து சேர்ந்தன. எல்லாக் குரங்குகளும் அவள்முன் வந்து நின்றன.

குரங்குத் தலைவன் டோரதிக்கு வணக்கம் செய்து, '' உன் உத்தரவு என்ன ? '' என்று கேட்டான்.

“ எங்களை இந்த மலைக்கப்பால் உள்ள குவாட்லிங்குகள் நாட்டில் கொண்டு சேர்க்க வேண்டும்,'' என்ருள் டோரதி.

“ இதோ செய்கிருேம்,” என்று சொன்னுன் குரங்குத் தலைவன். உடனே குரங்குகள் நான்கு நண்பர்களையும் தோத்தோவையும் தூக்கிக்கொண்டு பறந்து சென்று, அழகான குவாட்லிங்குகள் நாட்டில் அவர்களைக் கீழே இறக்கின.

குரங்குத்தலைவன் டோரதியைப் பார்த்து, “நீ எங்களைக் கூப்பிடக் கூடியது இதுவே கடைசித் தடவை. ஆகையால், நாங்கள் விடை பெற்றுக்கொள்கிருேம். உனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகட்டும்,” என்று கூற, குரங்குகள் வானில் பறந்து சென்று மறைந்தன.

குவாட்லிங்குகள் தேசம் செழுமையானதாகக் காணப்பட்டது. குவாட்லிங்குகள் நல்லவர்களாகவும் குதூகலமானவர்களாகவும் காணப்பட்டனர். அவர்கள் தோற்றத்தில் குள்ளமாக, சதைப்பற்றுடன் காணப்பட்டார்கள்.

டோரதியும் நண்பர்களும் இறங்கின இடத்துக்கு அருகே ஒரு விவசாயப் பண்ணை இருந்தது. நமது நண்பர்கள் பண்ணை வீட்டின் கதவைத் தட்டினுர்கள். விவசாயியின் மனைவி கதவைத் திறந்தாள். “எங்களுக்குப் பசிக்கிறது ; சாப்பிட ஏதாவது வேண்டும்,'' என்று டோரதி கேட்டதும், அவள் அவர்களை அன்புடன் வரவேற்று, சிறந்த விருந்து அளித்தாள்.

விருந்து முடிந்ததும், “ கிலிண்டா தேவதையின் மாளிகை இங்கிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறது ?'' என்று டோரதி கேட்டாள்.

“ அதிக தூரம் இல்லை. தெற்கே போகும் பாதையில் போங்கள். சீக்கிரமே அதை அடைவீர்கள்,” என்ருள் குடியானவனின் மனைவி.

அவர்கள் அப்பெண்ணுக்கு நன்றி செலுத்திவிட்டு நடக்கத் தொடங்கினுர்கள். சீக்கிரமே அவர்கள் முன் ஒரு மாளிகை தென்பட்டது. மாளிகையின் முன்வாசலில்

மூன்று பெண்கள் இருந்தனர். டோரதி அவர்களை நெருங்கியதும், அவர்களில் ஒருத்தி, "எங்கள் தென்திசை நாட்டுக்கு நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள் ?" என்று கேட்டாள்.

"இங்கே ஆட்சி செய்யும் நல்ல தேவதையைப் பார்க்க வந்திருக்கிறோம். எங்களை அவளிடம் அழைத்துச் செல்ல முடியுமா ?" என்றாள் டோரதி.

"உங்கள் பெயரைக் கொடுங்கள். கிலிண்டா உங்களைப் பார்க்க இசைவாளா என்று கேட்டுச் சொல்கிறேன்."

அவர்கள் தங்கள் பெயர்களைச் சொன்னார்கள். உடனே அந்தப் பெண் சிப்பாய் மாளிகைக்குள் போய்ச் சில நிமிஷங்களில் திரும்பி வந்தாள். டோரதியையும் நண்பர்களையும் உடனே உள்ளே அனுமதிக்கும்படி கிலிண்டா சொன்னதாக அவள் தெரிவித்தாள்.

## 20

---

நம் நண்பர்கள் முதலில் அந்தக் கோட்டையில் ஓர் அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கே அவர்கள் முகம், கை, கால் முதலியவற்றைக் கழுவிச் சுத்தம் செய்துகொண்டார்கள் ; பிறகு காவற்காரப் பெண்ணைப் பின்தொடர்ந்து ஒரு பெரிய அறைக்குள் சென்றார்கள். அங்கே தேவதை கிலிண்டா மாணிக்கங்கள் பதித்த சிம்மாசனத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தாள்.

அவள் டோரதியைப் பார்த்து, "உனக்கு என்ன வேண்டும், குழந்தாய் ?" என்று அன்புடன் கேட்டாள்.

டோரதி தன் கதை முழுவதையும் தேவதைக்குச் சொல்லி, " கான்ஸாஸுக்குத் திரும்பிப் போக வேண்டும் என்பது ஒன்றே என் ஆசை. என் பெரியம்மா என்னைக் காணுமல் எனக்கு ஏதோ பெரிய ஆபத்து நேர்ந்துவிட்டது என்று எண்ணிக்கொண்டிருப்பாள், பாவம்!" என்ருள் டோரதி.

" ஐயோ பாவம்! நீ கான்ஸாஸ் திரும்பிப் போவதற்கான வழியை நான் சொல்கிறேன். ஆனுல் இந்த உதவியை நான் செய்தால், நீ தங்கக் குல்லாயை எனக்குக் கொடுத்துவிட வேண்டும்," என்ருள் கிலிண்டா.

" ஆகா, தடையின்றிக் கொடுக்கிறேன். அதனுல் எனக்கு இனி ஒரு பிரயோசனமும் இல்லை. ஆனுல் நீங்கள் அதைக்கொண்டு பறக்கும் குரங்குகளை மூன்று முறை கூப்பிடலாம்," என்று டோரதி சொன்னுள். " எனக்கும் பறக்கும் குரங்குகளை மூன்று தடவை கூப்பிடும் அவசியம் இருக்கும் என்று தோன்றுகிறது," என்ருள் கிலிண்டா.

டோரதி தேவதையிடம் தங்கக் குல்லாயைக் கொடுத்தாள்.

தேவதை வைக்கோல் மனிதனிடம், "டோரதி போன பிறகு நீ என்ன செய்யப் போகிருய்?" என்று கேட்டாள்.

"நான் மரகத நகருக்குத் திரும்பிப் போகப் போகிறேன். ஆஸ் மாயாவி என்னை அந்த நகரின் அரசனுக நியமித்திருக்கிருர். அந்த ஊர் மக்களுக்கும் என்னைக் கண்டால் பிடிக்கிறது. ஆனுல் கொட்டாப்புளித் தலையர்கள் வசிக்கும் மலையை எப்படித் தாண்டிப் போவது என்றுதான் கவலையாக இருக்கிறது," என்ருன் வைக்கோல் மனிதன்.

" தங்கக் குல்லாயைக் கொண்டு பறக்கும் குரங்குகளைக் கூப்பிட்டு உன்னை மரகத நகரின் கோட்டை வாசலில் கொண்டுபோய் விடச் சொல்கிறேன்," என்ருள் கிலிண்டா.

பிறகு இரும்பு மனிதனிடம் கிலிண்டா, "டோரதி சென்றதும் நீ என்ன செய்யப் போகிருய்?" என்று கேட்டாள்.

இரும்பு மனிதன் தன் கோடாலிமீது சாய்ந்துகொண்டு சிறிது நேரம் யோசித்தான். பிறகு, "விங்கீக்கள் என்னிடம் மிகவும் அன்பாக இருந்தனர். கெட்ட தேவதை இறந்ததும் அவர்கள் நாட்டை ஆளுமாறு என்னைக் கேட்டுக் கொண்டனர். எனக்கும் அவர்களைப் பிடித்திருந்தது. நான் மேற்குத் திசை நாட்டுக்குத் திரும்ப முடியுமாஞல், அங்கே அவர்களின் அரசஞக இருந்து ஆண்டுகொண்டிருப்பதையே விரும்புகிறேன்," என்ருன் இரும்பு மனிதன்.

"பறக்கும் குரங்குகளுக்கு என்னுடைய இரண்டாவது கட்டளை, உன்னை விங்கீக்களுடைய நாட்டுக்குப் பத்திரமாகக் கொண்டுபோய் விடச் செய்வதே," என்ருள் கிலிண்டா.

பிறகு தேவதை சிங்கத்தைப் பார்த்து, "டோரதி வீடு திரும்பிய பின் உன் கதி என்ன?" என்று கேட்டாள்.

"கொட்டாப்புளித் தலையர்கள் வாழும் மலைக்கு அப்பால் ஒரு பெரிய காடு இருக்கிறது. அங்கே உள்ள மிருகங்கள் என்னைத் தங்கள் அரசஞகத் தேர்ந்தெடுத்திருக்கின்றன. நான் மட்டும் அந்தக் காட்டுக்குப் போக முடியுமாஞல் அங்கேயே சுகமாக என் காலத்தைக் கழிப்பேன்," என்றது சிங்கம்.

"பறக்கும் குரங்குகளுக்கு என் மூன்ருவது கட்டளை உன்னை உன்னுடைய காட்டிற்குக் கொண்டு போய் விடச் செய்வதே. தங்கக் குல்லாயின் மந்திர சக்தியை இப்படி உபயோகித்தபின் நான் அந்தக் குல்லாயைக் குரங்குத் தலைவனிடமே கொடுத்துவிடப் போகிறேன். அவனும் அவன் குரங்குக் கூட்டமும் அதற்குப் பிறகு சுதந்தரமாக இருக்கலாம்," என்று கூறி முடித்தாள் கிலிண்டா.

பிறகு கிலிண்டா டோரதியைப் பார்த்து, "உன்னுடைய வெள்ளிப் பாதரட்சைகளே உன்னைப் பாலைவனத்துக்கு மேலே தூக்கிச் செல்லும். உனக்குமட்டும் அவற்

றின் சக்தியைப் பற்றித் தெரிந்திருந்தால் நீ இந்த உலகத்துக்கு வந்த அன்றைக்கே உன் பெரியம்மாவைப் பார்க்கப் போயிருக்கலாம் !" என்ருள்.

உடனே வைக்கோல் மனிதன், "அப்படிப் போயிருந்தால் எனக்கு இவ்வளவு அற்புதமான மூளை கிடைத்திருக்காதே ! என் வாழ்நாள் முழுவதும் சோளக்கொல்லையிலேயே இருந்திருக்க வேண்டியிருக்கும் !" என்று சொன்னுன்.

"எனக்கும் அழகான இருதயம் கிடைத்திருக்காது. உலகம் முடியும்வரை நான் காட்டின் நடுவிலேயே நின்றவாறு துருப்பிடித்துக்கொண்டு இருந்திருப்பேன் !" என்ருன் இரும்பு மனிதன்.

"நானும் பயந்தாங்கொள்ளியாகவே வாழ வேண்டி இருந்திருக்கும். காட்டிலுள்ள மிருகங்களில் ஒன்றுகூட என்னை முகமெடுத்துப் பார்த்துப்பேசாது," என்றது சிங்கம்.

"அவையெல்லாம் உண்மைதான். நான் இந்த நல்ல நண்பர்களுக்கு உபயோகமாக இருந்ததை நினைத்தால் உண்மையாகவே எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. இப்போது எல்லாருக்கும் அவரவருக்கு மிகவும் விருப்பமானது கிடைத்துவிட்டது. தவிர, ஒவ்வொருவருக்கும் ஆளுவதற்கு ஒரு ராஜ்யம் வேறு கிடைத்துவிட்டது. அவர்கள் சந்தோஷத்திற்கு என்ன குறைவு ? ஆகையால், இனிமேல் நான் கான்ஸாஸுக்குத் திரும்பலாம் என்று நினைக்கிறேன்," என்ருள் டோரதி.

கிலிண்டா டோரதியைப் பார்த்து, "இந்த வெள்ளிப் பாதரட்சைகளுக்கு அதிசய சக்திகள் உண்டு. நீ செய்ய வேண்டியதெல்லாம் பாதரட்சைகளின் குதிக்கால்களை ஒன்ருேடொன்று மூன்று முறை தட்ட வேண்டியதுதான். பிறகு உனக்கு விருப்பமான இடத்துக்குப் போகுமாறு கட்டளை இட்டால் போதும்," என்ருள்.

டோரதி தோத்தோவைக் கையில் எடுத்துக்கொண்டாள். தன் நண்பர்கள் எல்லாரிடமும் கடைசித் தடவையாக விடை பெற்றுக்கொண்டாள். கிலிண்டா சொன்ன

படி கால்களைச் சேர்த்து வைத்துக்கொண்டு பாதரட்சைகளின் குதிக்கால்களை ஒன்றோடொன்று மூன்று முறை தட்டிக்கொண்டே, "என்னை என் பெரியம்மா வீட்டிற்குக் கொண்டு போ!" என்று சொன்னாள்.

அடுத்த நிமிடம் அவள் காற்றைக் கிழித்துக்கொண்டு பறந்துகொண்டிருந்தாள். வெகு வேகமாகப் பறந்ததால் அவளால் எதையும் பார்க்க முடியவில்லை. காதுகளில் காற்றினால் ஏற்பட்ட 'உஸ்' என்ற சத்தம் மட்டுமே கேட்டது.

## 21

---

பெரியம்மா அப்பொழுதுதான் தோட்டத்திலிருக்கும் முட்டைக்கோஸ் செடிகளுக்குத் தண்ணீர் விடுவதற்காக வெளியே வந்தாள். அவள் நிமிர்ந்து பார்த்தபோது டோரதி தன்னை நோக்கி ஓடி வருவதைக் கண்டாள். டோரதி நெருங்கியதும் அவளைக் கட்டி அணைத்துக் கொண்டு அவள் முகத்தில் முத்தங்களைப் பொழிந்து கொண்டே, "என் கண்ணே! இத்தனை நாள் எங்கே போனாய்? இப்பொழுது எங்கிருந்து வருகிறாய்?" என்றாள்.

டோரதி கம்பீரமாக, "ஆஸ் மாயாவியின் உலகத்திலிருந்து, பெரியம்மா. இதோ பார், பெரியம்மா, தோத்தோ கூட வந்திருக்கிறது! பெரியம்மா, எனக்கு வீடு வந்து சேர்ந்ததில் எத்தனை சந்தோஷம் தெரியுமா!" என்றாள்.

[ முற்றும் ]